## 15 : 3

இடம் : *கைக்களத்தூர் சிவன் கோயில் சுப்பிரமணிய சுவாமி சன்னதியில் வைத்துக் கட்டப்பட்டுள்ள கல்.*

காலம் : *முதலாம் இராஜராஜன் , யா : 4, பொ.ஆ 989*

செய்தி : *நில விற்பனை*

1 கோவிராசகேசரி பந்மற்க்கு யாண்டு 4–யாவது நடுவிற்பரப்பில் கூற்ற

2 . . . றயிழிச்சி நாங்கள் விற்றுக் குடுத்த நிலமாவது எங்களூரில்

## 15 : 4

*இடம் : மேற்படி கைக்களத்தூர், சிவன் கோயில் சுப்பிரமணிய சுவாமி சன்னதியில் வைத்துக் கட்டப்பட்டுள்ள துண்டுக் கற்கள்*

காலம் : *முதலாம் இராஜராஜன் , யா :17, பொ.ஆ 1002*

செய்தி : *கோயிலில் காலை நேரத்தில் பூஜை நடத்தப்படும் போது (ஸ்ரீபலிகொட்டுதல்) காளம், சேகண்டி போன்ற இசைக்கருவிகளை இசைப்பதற்கு என மூன்று உவச்சர்களை நியமித்து அவர்களுக்கு நிலமும் மனையும் கொடுக்கப்பட்டது.*

### துண்டு : 1

1 கோவிராஜகேசரி பந்மர்க்கி யாண்டு பதின்நேழுவாது மிலாட்டு ப்ர

2 . . . மிரண்டும் சேகண்டிக் கொன்று ஆக மூவர்க்கு நாங்கள் செது குடுத்த

3 . . . ற் முதலட்டகத்துக்கு ஸ------நிலம் தென்றலையி

4 . . . விசைந்த பெருநான் கெல்லையுள் பட நில கொண்டு யிவூர்

### துண்டு : 2

1 . . . ஸபையோ ஸ்ரீகயிலாஸமுடைய மஹாதேவர்க்கு மூன்று ஸந்தியு

2 . . . தானத்துக்கு தெற்க்கு தென்பாற்கொல்லை முதலட்டகத்துக்கு வடக்கு வடக்க

3 . . . லை பேசவன் பூமிக்கு மேக்கு தென்பாற்கெல்லை கிழக்கு நோக்கிபோன வதிக்கு வ

4 . . . தித்தவற் செது குடுத்தோம் ஸபையோ

### மூன்றாவது துண்டு

1 . . . ருவையாறு சதுர்வேதி மங்கலத்து

2 . . . வதிக்கு கிழக்கு வடபாற்கெல்லை தேவ

3 . . . த்துக்கும் . . . லாசன் . . . கு தெற்கு கீழ்பாற்கெ

4 . . .

துண்டு : 4

1 . . . ங்கத்துக்கு கோதண்டன் மங்கலாச்சன் பூமிக்கம் லடபாற்கெல்லை . . . ந் எழுவந்

2 . . . க்கு தெற்கும் இவ்விசைத்த பெருனான் கெல்லையுள்ளகப் பட்ட நீர்நிலம் புன்

3 . . . [இறை] யான் நரைசூர் பாத சிவந் இருபத்து னால்வன் அரங்கநும் மக்களுக்கும்

துண்டு : 5

1 . . . பாக்கூற்றத்துப் ப்ரஹ்மதேயந் தி

2 . . . மியாவது மேல்பாற்கெல்லை

3 . . . க்கு கிழக்கு வடபாற்கெல்லை து

4 . . . ன் வெண்காடன்னேன் காளமி

துண்டு : 6

1 . . . கோட்டத்துக்கு வடக்கு மேல்பார்க்கெல்லை விற்மபோகத்

2 . . . ழக்கும் தேவதானத்துக்கு கிழக்கு வடபார்க்கெல்லை தேவதா

3 . . . க்கு தெற்கு ஒரு மனையும் சத்தயு ஸ்ரீபலிகொட்டும் உவச்சர்

4 . . . ன் ஆலவாயன் எழுபது நால் ஆசாரியனேன் என்னெழுத்து

15 : 5

இடம்: *மேற்படி சன்னதி மேற்கு சுவரில் வைத்துக்கட்டப்பட்டுள்ள கற்கள்.*

காலம்: *முதலாம் இராஜராஜன் , யா : 17, பொ.ஆ 1002*

செய்தி: *இக்கோயில் நந்தா விளக்கு எரிப்பதற்கு எட்டுக் கழஞ்சுப் பொன் கொடுக்கப்பட்டது.*

1 . . . கொளக் காந்தளூர் சாலை கலமறுத்தருளி கங்கபாடியும் நுளம்பபாடியும் வேங்கை நாடுந் தடிகை பாடியுங் குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமு

2 . . . ளங்கு யாண்டே செழியரைத் தேசுகொள் ஸ்ரீகோவிராஜராஜ கேசரிபந்மர்க்கி யாண்டு பதின் நேழாவது மிலாடு வெம்பாற் கூற்றத்து ப்ரஹ்மதேயம் திருவையாறு சது

3 ...நொந்தா விளக்கு ஒன்றுக்கு பொன் எண் கழஞ்சு கொண்டு தேவர்க்கு நொந்தா விளக்கு நிசதம் முழாக்காக திங்கள் எழுநாழி உரி யெண்ணையும் அட்டுவிதாகவு மலை

4 . . . சதம் உழக்கெண்ணையா திங்கள் எழுநாடுரி தேவர்க்கட்டி தேவர்கன்மிகள்ளிடை தரவு கொள்விதானோம் ஸபையோம்.

## 15 : 6

இடம்: *மேற்படி வட்டம், எசனை பெருமாள் கோவில்*

காலம்: *கலிவருஷம் 4989, பொ.ஆ.1888*

செய்தி: *பெரம்பலூர் தாலுக்கா எசனைக் கிராமத்தில் இருக்கும் ஸ்ரீ வேணு கோபால சுவாமிக்கு தானசாசனமாக நிலம் கொடுக்கப்பட்டது. இதை பெரம்பலூர் தாலுக்கா களனிவாசல் கிராமத்தைச் சேர்ந்த ரெங்காச்சி ரெட்டியார் மகன் முத்து ரெட்டியார் கொடுத்துள்ளார்*

1 வர்த்தமான கலியுகாதி ஆ
2 4929 மேல் சர்வஜித்து ஆ
3 *சித்திரை மீ* 6 தேதி பெறம்பலூர்
4 தாலுக்கா யெசனை கிராமத்தில் யிரு
5 க்கும் ஸ்ரீவேணுகோபால சுவாமிக்கு ஷெ
6 தாலுக்கா களனி வாசல்
7 கிராமத்தில் யிருக்கும்
8 ரெங்காச்சி ரெட்டியார்
9 யெழுதிக் குடுத்த தான சா
10 சனக் கல்லு யென்ன மென்றா–
11 ல் ஷெ யெசனை கிராமத்தி–
12 ல் யென்தன் மகனாக வீர–
13 ம்மாளால் கிடைத்த
14 நஞ்சை நிலம்–உ நி 8
15 யிந்த நிலத்தை யிதுக்கு முந்தி சுமார்
16 2 வருஷத்துக்கு முந்தியே ஷெ வேணு கோபாலசுவாமிக்குத்
17 தான சாசனமாயி விடப்பட்டது உ ரங்காச்சி ரெட்டியார் மகன்
18 முத்து ரெட்டியார்
19 உபையம் உ

## 15 : 7

**இடம்:** *மேற்படி வட்டம், களரம்பட்டி கைலாசநாதர் கோயில் கருவறை வடக்குச்சுவர் பீடம், மேற்குச் சுவர், அர்த்தமண்டபத் தெற்கு அதிஸ்டானம், வடக்குப் பட்டிகை*

**காலம்:** *மூன்றாம் குலோத்துங்க சோழன், பொ.ஆ 12ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *இக்கோயிலின் உபானப்படையை திருமழபாடியான் அதிகைய்ராயனும் சொர்ணக்கரி மக்களும் சேர்ந்து கட்டியுள்ளனர். இக்கோயில் குமுதப்படை, திருவுண்ணாழிகை ஆகியவற்றை பொய்யாமொழி செய்துள்ளார் இக்கோயில் பிரதமப் பலகையை வரகூரான தேவன்பாடியும் குசக்காணியும் உடைய குசவன் பட்டன் தேவனான ஈசான தேவன் என்பவர் கட்டியுள்ளார்*

### துண்டு : 1

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ வீரராஜேந்திர சோழ தேவற்கு யாண்டு . . .

2 டிசோறன் திருமழபாடியான் அதிகைய ராயனும் இன்த சொற்னக்கரி மக்கள் கொ . . .

3 பி சாதனும் இம்மூவரும் செம்பாதியும் இவ்வதிகையாரயன் செம்பாதியுமாக இந்த உபானப்படை.

### துண்டு : 2

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் . . .

2 யூருடையான் உடையான் பொய்யாமொழி[திரு] . . .

3 ப்பணி இக்குமுதகப்படை திருவுண்ணாழிகை . . .

4 கோயிலும் செய்வித்தேந் உடையான் பொ . . .

### துண்டு : 3

1 ஸ்வஸ்தி ஸ்ரீ நன்றாக வரகூறான தேவந்பாடியுங் குசக்காணியுடைய கு . . .

2 . . . சவன் பட்டன் தேவனுன ஈசான தேவநேன் இத்திருக் கோயில் பிரதம பல

3 கை முற்றுஞ் செய்வித்தேன் உ

### துண்டு : 4

1 . . . டையன்--த்தன்சி ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க சோழதே-

2 . . . லும் செய்வித்து மேல் வயலில் கிணறும் செய்தது

## 15 : 8

**இடம்:** *மேற்படி வட்டம், களரம்பட்டி கைலாசநாதர் கோயில் அர்த்தமண்டப வடசுவர் பீடம்*

**காலம்:** *நல்லப்பரட்டியார், சகம் 1622, பொ.ஆ.17ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *துறையூர் பாளையக்காரர் செட்டிக்குளம் வல்லக்கோல் எறமரெட்டியாரின் மகன் நல்லப்ப ரெட்டியாரால் கைலாசநாதர் கோயில், கருணாகரவல்லியம்மன் கோயில், வரதராச பெருமாள் கோயில் ஆகியவை கட்டப்பட்டன. இவருடன் களரம்பட்டி குடியானபேர்களும், கோட்டாத்தூர் மாகாண மணியம் சேஷாத்திரி ரெட்டியாரும், களரம்பட்டி மணியம் இலட்சும ரெட்டியாரும், இப்பணியில் ஈடுபட்டனர் நக்கசேலம் பரமேஸ்வர குருக்களுக்கு இக்கோயில் பூஜைக்கு காணியாட்சியாக களரம்பட்டியில் 340 குழி நிலமும் செட்டிகுளம் அண்ணாப்பிள்ளை அய்யன் என்பவருக்கு வரதராஜபெருமாள் கோயில் பூஜைக்கு களரம்பட்டியில் காணியாட்சியாக 315 குழி நிலமும் கொடுக்கப்பட்டது.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகார்த்தம் 1622யிதன் மேல் செல்லா நின்ற கலியுகம் . . . யிதன் மேல் செல்லா நின்ற விக்கிறம ஞு தைய் 3 உ உத்தராயணம் சு

2 க்குல பக்ஷத்தில் ஸ்ரீமது செட்டிகுளம் வல்லகோல் எறம ரட்டியார் குமரர் நல்லப்ப ரட்டியாரவர்கள் துறையூரில் ராச்சியம் பண்ணுகையில் கையிலாசநாத கருணாகற வல்லியம்மை

3 வறதராசப் பெருமாள் கோயிலும் கட்டினது உத்தாரமாய் களரம்பட்டி குடியான பேற் பலர்களையும் உபயமாய்க் கேட்டுக்கொண்டு கோட்டாத்தூர் மாகாண மணியம் சேஷாத்திரி ரட்டியா

4 ரும் களரம்பட்டி மணியம் லட்சும ரட்டியாரும் யீசுவரன் அம்மன் பெருமாள் கோவில் திருப்பணியளும் கட்டி முடிச்சு பிறதிஷ்டையும் பண்ணி வச்சு நிற

5 வேற்தின தற்மம் பரிபாலமாயிருக்கவும் நக்கசேலம் பரமேசுர குருக்கள் களரம்பட்டி காணியாஷி கயிலாசநாதர் கோவில் கட்டுகையிலே குடுத்தது நிலம் 340

6] ஸ்ரீ செட்டிகுளம் அண்ணா பிள்ளைய்யன் களரம்பட்டி வரதராச பெருமாள் கோவில் காணியாஷி குடுத்தது நிலம் 315

## 15 : 9

**இடம்:** *குன்னம் வட்டம், கீழப்புலியூர் மன்னார்சாமி கோயில் குளக்கரையில் நடப்பட்டுள்ள கல்*

காலம்: *சுபகிருது, பொ.ஆ.18,19ஆம் நூற்றாண்டு*

செய்தி: *புளியூரில் உள்ள மன்னாதசாமி, பச்சையம்மன் கோயில் பூஜை திருவிளக்குக் கட்டளைக்கு குமரப்ப உடையார் கோயிலைச் சுற்றியும் ஏரிக்கரையிலும் இலுப்பை, புளிய மரம், மாமரம் தோப்புகள் வைத்துக் கொடுத்துள்ளார்.*

ஸ்ரீ ராமஜெயம்

1 சுபகிருது ௵ வைய்யாசி *மீ* 20

3 ஷ உ குருவாரம் மிருகசீரிஷ ந–

4 க்ஷத்திரம் கூடின சுபதினத்தில்–

5 புளியூரிலிருக்கும் மன்னாத பச்–

6 சையம்மன் திருவிளக்கு பூஜை–

7 ச கட்டளைக்கு . . . அய்ய–

8 ம் பெறுமாளுடையான்

9 குமாரன் அய்யம் பெரு–

10 மாளுடையான் குமரப்–

11 புடையானலே யுண்டி கே–

12 காவிலை சுத்திலும் ஏ–

13 வறி கரையிலு மிறுக்–

14 கப்பட்ட யிலுப்பை புளி–

15 ய மர மா [மரத்தோப்பு] செ–

16] ய்யலாச்சுது யிதை பறிபா–

17] லன செய்தால் அசுவமே–

18] த யாகம் பண்ணின பலனுண்–

19] டு விகர்தம் செய்தால் யா–

20ல கத்தை யழித்த பலனுண்டு

## 15 : 10

இடம்: *மேற்படி வட்டம், கூடலூர் நத்தக் காட்டில் நடப்பட்டுள்ள கல்*

காலம்: *பொ.ஆ.12-13ஆம் நூற்றாண்டு எழுத்தமைதி*

செய்தி: *பிள்ளை பஞ்சவராயர் என்பவருக்கு தீங்கு வந்து அவர் இறக்க நேர்ந்தால் அவருக்காக உடனிருந்து தன் உயிரைத் தியாகம் செய்வதாக வீரமடக்க பஞ்சவராய பல்லவரையன் என்பவர் உறுதிமொழி கூறி அதைக் கல்வெட்டாகவும் எழுதி*

*வைத்துள்ளார் சோழர் காலத்தில் பல படைவீரர்கள் தங்கள் எஜமானர்களின் வெற்றிக்காக தங்களின் உயிரைத் தருவதாகவும் அவர் இறந்த பிறகு தாங்கள் உயிர் வாழ மாட்டோம் என்று உறுதி கூறியும் எழுதி வைத்த கல்வெட்டுக்கள் அரகண்டநல்லூர் உள்ளிட்ட கோயில்களில் உள்ளன.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ
2 பிள்ளை பஞ்ச-
3 வராயர் திரு மே-
4 மனிக்கு வீரம்-
5 மடக்க பஞ்ச-
6 வராயப் பல்-
7 லவரையன்-
8 னேன் பிள்-
9 ளை சீய் பாதத்-
10 துக்கு உடந்[ே பிள்]-
11 ளையாக நின்று
12 பிள்ளை திருமே-
13 னிக்கு இலெய-
14 ம் வந்த போது
15 இவர் சீ பாதத்தே
16 சேர்வக் கட-
17 வேனாக கல்
18 வெட்டி நாட்டி-
19 னேன் பஞ்சவ-
20 ன் பல்லவரை
21 [யனேன்].

**15 : 11**

**இடம் :** *மேற்படி வட்டம், சிறுகன்பூர் சிவன் கோயில் கருவறைத் தெற்குச் சுவர்*

**காலம் :** *விக்கிரமசோழன், யா: 15, பொ.ஆ. 1133*

**செய்தி :** *மன்னரின் பெயரும் ஆட்சியாண்டும் உள்ளது மீதிப்பகுதி சிதைந்துவிட்டது.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ விக்கிரம சோழ

2 தேவர்க்கு யாண்டு 15-ஆ

3 வது . . .

## 15 : 12

**இடம்:** *மேற்படிக் கோயில் முன்மண்டபச் சுவர்*

**காலம்:** *பொ.ஆ 12-13 ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *இக்கல்வெட்டு எழுதப்பெற்றுள்ள மண்டபத்தின் பெயர் உத்தமசோழன் திருமண்டபம் என்று குறிப்பிடப்படுகிறது.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ இந்த திருமண்

2 டபம் உத்தம சோழ

3 ந் திருமண்டபம்.

## 15 : 13

**இடம்:** *மேற்படிக் கோயில் அம்மன் சன்னதி கருவறைத் தெற்குச் சுவர்*

**காலம்:** *பொ.ஆ.16-17 ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *சிறுகணம்பூர் பிரம்மீஸ்வரமுடையவர் கோயிலில் உள்ள பெரியம்மை நாச்சியார்க் கோயில் கற்பகிரகம், அர்த்த மண்டபம் ஆகியவற்றை அரியலுடை சிதம்பரத்துடையார் என்பவர் கட்டியுள்ளார் இப்பகுதியில் வாழும் நத்தம உடையார்களிடம் தாங்கள் எந்த ஊரில் பூர்வீகமாகவும் காணியாட்சி உரிமை உடையவர்களாகவும் வாழ்ந்திருந்தார்களோ அந்த ஊர்ப் பெயரைக் குறிப்பிடும் வகையில் தங்கள் பெயருக்குமுன் அரியலுடை, உகளுடை, வரகுடை எனக் குறிப்பிட்டுக் கொள்ளும் வழக்கம் உள்ளது. சிதம்பரத்துடையார் அரியலூரில் காணியாட்சி உடையவராக இருந்துள்ளார் என்பதை அவர் பெயருக்குமுன் உள்ள அரியலுடை என்ற பெயரால் அறியலாம்*

1 பாவ ஞு தை மாதம் 25ஆம் தேதி சிறுகணம்பூர் உடையவர்

2 பிரமீஸ்வரமுடையவர் நாச்சியார் பெரியம்மை கோயில்

3 கெற்பகரம் அற்த மண்டபமும் அரியலுடை இஞ்சி

4 உடையார் மகன் சிதம்பரத்துடையார் மெனுடை

5 பிணய கட்டியர் மகன் . . . சுப்பு கட்டியாரும் கட்டி

6 விச்ச புண்ணியம் யிது எழுதினவன் நெ-

7 ட்டம் மெய்யனாச . . . ான எழுத்து.

## 15 : 14

**இடம்:** மேற்படி வட்டம், சிறுவாச்சூர் மதுரகாளியம்மன் கோயில் தெப்பக்குள வடக்குக் கரையில் நடப்பட்டுள்ள கல்

**காலம்:** *பொ.ஆ. 17-18 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதி*

**செய்தி:** *செறுவாச்சியூரில் இருக்கும் அருணாசலப் பண்டாரத்தின் மகன் ஆறுமுகப் பண்டாரம் இந்த நாட்டுக் கல்லை வைத்துள்ளார் இது ஆடுமாடுகள் தங்கள் முதுகை சொரிந்து அரிப்பை போக்கிக் கொள்ள நடப்பட்ட நாட்டுக் கல் என்று இவ்வூர் மக்கள் கூறுகின்றனர்.*

1 ஸ்ரீ முக ஸு

2 வைய்யாசி மீ

3 25 உ செரு

4 வாச்சியூரி

5 லேயிருக்கும்

6 அருணசல ப

7 ண்டார மகன்

8 ஆருமுக பண்ட

9 ாரம் நாட்டுக் க

10 ல்லு.

## 15 : 15

**இடம்:** மேற்படி வட்டம், செஞ்சேரி சொக்கநாதர் சிவன் கோயில் எதிரில் நடப்பட்டுள்ள கல்பலகை

**காலம்:** *அரியலூர் அரசு நிலையிட்ட கிருஷ்ணப்ப மழவராயர், ஜய வருஷம், பொ.ஆ. 1593*

**செய்தி:** *இவ்வூரின் பெயர் தென்சேரி. தற்போது மருவி செஞ்சேரி என அழைக்கப்படுகிறது. இவ்வூர் ஸ்ரீரங்கநாதர் சுவாமிக்கு திருவிடையாட்ட கிராமமாக இருந்தது இவ்வூர் அரியலூர் பாளையக்காரர் அரசு நிலையிட்ட கிருஷ்ணப்ப மழவராயருக்கு குத்தகைக் கிராமமாக இருந்தது. இவர் இவ்வூருக்கு குடி வருகிறவர்களுக்கு வழங்கிய வரிச் சலுகைகள் பற்றி கூறுகிறது.*

1 செய ஸு ஷம் அ–

2 ற்ப்பசி மீ 12 ஸ்ரீரங்–

3 க நாதர் சுவாமி தி–

4 ரு விளையாட்டம்

5 தென்சேரிக் குத்தகை

6 யன் அரசு நிலையிட்ட

7 கிஷ்ணப்ப மழவராயர்
8 தென்சேரிக்கு வருகிற

பின்பக்கம்

1 குடிக்கு கட்டளையிட்ட–
2 து வற குடியானவர்–
3 கள் களவு செ[ய்]தவர்
4 கன்னமிட்டவன் [ம]
5 னைபட்டவன் தவிர
6 வுள்ளபேர் எல்லாம்
7 மாசத்திலேய் குடியள்–
8 . . . ஈலுனிலம் அநு–
9 காலம் சுகமாய் யி–
10 ருந்த னேரத்துக்·ஷ
11 கு எல்லாம் சுக–
12 த்திலே குடியி–
13 ருக்கபோற பெ–
14 ஈழுது பகலே
15 குடிப்பிறப்பட்டு–
16 ப்போக இந்த–
17 ப்படிக்கு நயினார்
18 பாதத்தாணை–
19 யே தப்பாது யி–
20 ந்தப்படிக்கு ச–
21 ந்திராதித்தவ–
22 ரையும் நட–
23 த்தக் கடவர–
24 ஈகவும் யி–
25 ந்த தந்மத்து–
26 க்கு அகுதம் ப–
27 ண்ணிந பேர்–
28 கள் கெங்–
29 கைக் க–
30 ரையிலே
31 காராம் பசு–
32 வை கொ–
33 ன்ற தோஷ–
34 த்திலே பே–
35 ஈகக் கட–
36 வராக–
37 வும் நயி–
38 நார் மணி–
39 ய மளை ந–
40 ஈச்சிய மளை–
41 . . . செ–
42 ஈர்ப்படிக்–
43 கு தர்ம ம–
44 ன கட்–
45 டளை யி–
46 ட்டது.

15 : 16

**இடம்:** *மேற்படி ஊர் பெருமாள் கோயில் தென் சுவர் முப்பட்டைக் குமுதப் பகுதி*

**காலம்:** *பொ.ஆ.17-18ம் நூற்றாண்டு*

**செய்தி:** *தென்சேரி திருவேங்கடநாத சுவாமிக் கோயில் கட்டி வைத்தவர் பெயர் தெலுங்கில் எழுதப்பட்டுள்ளது.*

1 தென்சேரி திருவேங்கட நாத சுவாமியள் கோயில் கட்டி வைச்சார் [பெயர் தெலுங்கில் உள்ளது]

## 15 : 17

**இடம்:** *மேற்படி வட்டம், செங்குணம் சிவன்கோயில் கோபுர வாயில் பீடத்தில் வைத்துக் கட்டப்பட்டுள்ள துண்டுக்கற்கள்*

**காலம்:** *முதலாம் இராஜேந்திரன், யா 16, பொ.ஆ.1028*

**செய்தி:** *செங்குன்றம் திருத்தான்தோன்றி ஈஸ்வரமுடைய மகாதேவற் கோயிலை ஒளியாலைபுரமுடையான் என்பவர் கட்டியுள்ளார் இவர் திருவிளக்கு எரிக்க 32 பசுக்களும் பூஜை வழிபாட்டிற்கு நிலமும் கொடுத்துள்ளார்.*

### துண்டு : 1

1 திருமன்னி வளர இ . . .
2 நண்ணற் கரு முரண் . . .
3 மயிற் சூடுங் குலதந ம . . .
4 பழிமிக முயங்கியில் . . .

### துண்டு : 2

1 றையும் இறுப்பிச்சும் இ தேவரே இப்பூமி அநு . . .
2 றுக்கும் பசு முப்பத்திரண்டும் ஒளியாலை புரமு . . .
3 கோயில் எடுப்பித்தாந் ஒளியாலை புரமு[டையான்] . . .

### துண்டு : 3

1 மும் கொப்புறு நிறைபுகழ் மாப்பப் பாளமும் காவலம் பு . . .
2 லிங்கமும் கலாமுகிற் கடுந்திற லிலா முரி தேசமும்
3 சோழதேவர்க்கு யாண்டு 16 ஆவது வடகரை உத் . . .
4 றூட்டுச் செய்து குடுத்த நிலமாவது தாழையோடை . . .

### துண்டு : 4

1 டை வளைப்பஞ்சூறும் கலைத் தக்கோர் பு . . .
2 ாவல் கடுமுரட்க் கடாரமும் மாப்பொருதண்டாற்க் . . .
3 ள்ளுமாடி திருத்தாந்தோந்றி ஈஸ்வரமுடைய மஹா . . .
4 ஏரிக்குக் கிழக்கும் செங்குந்றத்து எல்லைக்குத் தெற்கு . . .

## 15 : 18

**இடம்:** *மேற்படி ஊர், செங்குணம் ஜெய் அனுமன் கோயிலில் உள்ள கற்பலகை*

காலம் : *சகவருஷம் 1746, கலிவருஷம் 4025, : பொ.ஆ. 1824*

செய்தி : *செங்குணம் மிராசுதார் சின்னப்பண்ணை சுப்புரெட்டியாரின் பேரனும் நல்லப்ப ரெட்டியார் மகனுமான சாம்பசிவ ரெட்டியார் மற்றும் கருசவடையான் மகன் ஆண்டியப்ப உடையார் ஆகிய இருவரும் இவ்வூரில் குளம், நந்தவனம், சாவடி ஆகியவைகளை அமைத்து அவற்றின் பராமரிப்புக்கு நஞ்சை, புஞ்சை நிலங்களைத் தானமாக வழங்கியுள்ளனர் இந்த தர்மத்தை பரிபாலனம் செய்தவர்களுக்கு அசுவமேத யாகம் செய்த பலனும் இதை அழித்தவர்களுக்கு யாகத்தை அழித்த பலனும் கிடைக்கும் எனவும் கல்வெட்டின் இறுதியில் தெலுங்கு மொழியில் ஸ்ரீராம ஜெயம் எனவும் எழுதப்பட்டுள்ளது. இக்கல்பலகையின் பின்புறம் அனுமனின் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது*

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்வஸ்தி ஸ்ரீ சாலி | 2 | வாகன சகாப்தம் 17 |
| 3 | 46 கலியுகம் 40 | 4 | 25–செல நின்ற த– |
| 5 | ாருண ஹூ சித்தரை மீ 4 | 6 | புதன் கிழமை சுவாதி ந– |
| 7 | க்ஷத்திரமும் கூடின சுபதி– | 8 | னத்தில் செங்குணமி– |
| 9 | றாசுதாராகிய சின்னப் ப– | 10 | ன்ணை ராஜஸ்ரீசுப்பு ரெட்டி– |
| 11 | யார் குமாரற் நல்லப்ப | 12 | ரெட்டியார் குமறறாகிய |
| 13 | சாம்பசிவ ரெட்டியாறாலே– | 14 | யுங் கருசவடையான் மகன் |
| 15 | ஆண்டியப்புடையானாலே | 16 | யுங்குளம் நந்தவனம் |
| 17 | சாவடி தற்மஞ்செ– | 18 | ய்யலாச்சுது யிது சவ |
| 19 | [றக்ஷண சாரகப் பண்ணவன் | 20 | நிலசிர . . . . அற்தமானியம்] |
| 21 | புஞ்சை . . . நஞ்சை . . . | 22 | யிதை பருபாலநஞ் செயி– |
| 23 | த பேருக்கு அஸ்வமேதயாக | 24 | பலனுண்டு யிதுக்கு ய– |
| 25 | ாதாமொருவன் தற்ம– | 26 | த்துக்கு விகர்தஞ் செய்தால் |
| 27 | யாகம் அழித்த பலனுண்டு | 28 | ஸ்ரீ ராம ஜெயம். |

**15 : 19**

இடம் : *மேற்படி வட்டம், துறைமங்கலம் சொக்கனாதசுவாமி கோயில் கருவறைத் தென்சுவர்*

காலம் : *சகம் வருஷம் 1606, பொ.ஆ. 1684*

செய்தி : *சொக்கநாதசுவாமி, நாச்சியம்மை பூஜை வழிபாட்டுக்கும், குருக்களுக்கும் நிலதானம் கொடுக்கப்பட்டது.*

1 ஸ்ரீமது சகாற்த்தம் 16–

2 06 மேல் செல்லா நி–

3 ன்ற பிறமாதீஷ

4 தை 10 வெள்ளி–

5 கிழமை பவர்ணை பூச–

6 நக்ஷெசெத்திரம் சுவாமி

7 சொக்கனாத சுவாமியாற்–

8 கும் நாச்சியம்மை பூசை நி–

9 வேத்தியத்துக்கு புஞ்சை

10 ஊருக்கு வடக்கு யிச்சிலடி

11 விரைகலம் தெக்கு

12 கருங்குளத்தடி விரை யிருகலம் நஞ்சை . . .

13 புத்தேரி பிரகரையில் இருவது குழி பெரி ஏரி பிற கரையில் இருபது குழி

14 . . . ம் கலம் கெணவதிக் குருக்கள் காணியாக்ஷி.

## 15 : 20

**இடம்:** *பெரம்பலூர் வட்டம், நமையூர் சிவன் கோயில் அருகில் உள்ள கல்வெட்டு*

**காலம்:** *பொ.ஆ 18-19 ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *அசுகூர் காணிஉடைய பரிமேல் அழக உடையார் மகன் ஏகாம்பரம் இக்கோயிலைக் கட்டியுள்ளார் அசுகூர் என்ற பெயர் மருவி அகூர் என ஆகிவிட்டது இவ்வூர்குன்னம் அருகே உள்ளது. இவ்வூரில் காணியாட்சி உடையவராக ஏகாம்பரம் குறிப்பிடப்படுகிறார்.*

1 விறோதி வருஷம் புரட்

2 டாசி 20 ஆ–

3 சூகுர் கா

4 ணி உடை

5 பரிமேல் அ

6 ழக உடையார்

7 மகன் ஏக

8 ாம்பரம்

9 பண்ணி வச்ச

10 கோயில்.

## 15 : 21

**இடம்:** *வேப்பந்தட்டை வட்டம், பிரமதேசம் ஊர்த் தெருவில் நடப்பெற்றுள்ள கற்பலகை*

**காலம்:** *மூன்றாம் குலோத்துங்கன், யா 10, பொ.ஆ. 1188*

**செய்தி:** *இவ்வூரின் பெயர் பிரிதிசூரச் சதுர்வேதிமங்கலமான பிரம்மதேசம் என்றும் இது கரிகால கன்ன வளநாட்டு வன்னாட்டின் கீழ்*

இருந்தது என்றும் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இவ்வூரை இராஜராஜ வன்னாடுடையார் என்பவர் வல்லுவன் புலியனான இருபத்துநால் பேரரையன் உள்ளிட்ட பள்ளிகளுக்கு (வன்னியர்) காணியாக வழங்கியுள்ளார். பிறகு இவ்வூரை நத்தமர்கள் (உடையார்கள்) வாங்கியதாக தெரிகிறது. இவர்கள் தாங்கள் வாங்கிய இவ்வூர் நில காணிகளை குறிப்பிட்ட சில பள்ளி வம்சத்தை சேர்ந்தவர்களுக்கு தவிர பிராமணர், வெள்ளாளர் மற்றும் பள்ளிகள் ஆகியோர்களுக்கு விற்பதில்லை எனவும் முடிவுசெய்தது பற்றி இக்கல்வெட்டு கூறுகிறது. இவ்வூரின் எல்லைகளாக அனுக்கூர், சிறுவிசலூர் ஆகியவை குறிப்பிடப்படு கின்றன. இக்கல்வெட்டு அக்காலத்தில் நிலவிய நிலஉடைமை முறை மற்றும் அவற்றை பராமரிப்பதில் சாதிகளுக்கு இடையே நிலவிய தொடர்பு பற்றி அறிய உதவுகிறது.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ
2 கொலோத்துங்க சோழ தே–
3 தவற்கு யாண்டு 10–ஆவது
4 வடகரை கரிகாலகந்ந வள
5 [நா]ட்டு வந்நாட்டு பிரிதிசூர சது
6 [ப்]பேதிமங்கலமாந பிரம
7 தேசத்தை எங்களய்யந் ராஜ ரா–
8 ஜ வந்நாடுடையார் இவூரை–
9 ர வல்லுவந் புலியநாந இருப–
10 த்து நால்ப் பேரையந் உ–
11 ள்ளிட்ட பள்ளிகளுக்கு காணி
12 செய்து குடுத்தார் ஸ்ரீரா–
13 ஜ ராஜ தேவற்கு யாண்டு–6
14 ஆவது திருவையாறுடையா–
15 ந் கரிகால சோழநான சனநாத
16 வந்நாடுடையாநும் நத்தம–
17 ரில் நாந . . . வந்நாடுடை
18 யாநும் இவ்வனைவோமும் பி–
19 ரமதேசமுடையபள்ளிகள்
20 நாட்டரையநுக்கும் புலியந்
21 மாதநாந மகதை நாட்டு தே–
22 பரையநுக்கும் புலியந் செ–
23 பரியாநாந வந்நாட்டு நா–
24 டாழ்வாநுக்–
25 கும் புலியந்
26 நாந திக்கும் சா–
27 த்தந் பெரிய–
28 ாநுக்கும் சோ–
29 மந் புலியநு–
30 க்கும் இவர்கள்
31 வங்குசத்துக்–
32 கல்லது மற்–
33 று பிராமண–
34 ர் வெள்ளாளருள்–
35 ளிட்டாருக்கும்
36 பள்ளிக்கும் வி–
37 ற்க கடவதல்–
38 லவாகவும்
39 சந்திராத்த–
40 வல் முள்ளத–
41 னையும் எங்க–
42 ள் வங்குசம்

43 . . .
44 . . .
45 . . .
46 . . .
47 . . . வாலிகண்டபுரத்து . . .
48 டின் முக்கூட்டு மொக்க எழு–
49 கும் தென்பாற்கெல்லை
50 க்கு வடக்கும் மேபாற்கெல்–
51 லை அனுக்கூர் எல்லைக்கு கிழக்–
52 கும் வடபாற்கெல்லை சிறுவி–
53 சலூர் எல்லைக்கு தெற்கும் இ–
54 ந்த நாலெல்லைக்குப்
55 பட்ட நிலம் இவர்கள் இ . . .
56 க்கு வேண்டுவநவு–
57 ஞ் செய்து சொப்ப . . .
58 த்து கொடு இருந்தமை . . . ம
59 கதை நாட்டு பேரையந்
60 புலியந் பெரியாநாந வந்நாட்டு நாடாழ்வாநும்
61 . . .
62 ணநாத வந்நாடு டையாநும்
63 இராசராச வந்நாடுடையா–
64 னும் விருபேரமுப்
65 . . .
66 ன் வல்லவரையன் சத்தி–
67 யம்.

## 15 : 22

**இடம்:** *பெரம்பலூர் வட்டம், பெருமத்தூர் சங்கீசர் கோயில் கருவறை மேற்குச் சுவர் முப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *மூன்றாம் குலோத்துங்கன், யா 12 , பொ.ஆ 1190,*

**செய்தி:** *வடகரை இராசசிங்க வளநாட்டு உகளூர் கூற்றத்தில் உள்ள தத்தனூர் உடைய நாயகப் பிள்ளையாருக்கு உகளூர் கூற்றத்து பெருமுத்தூரில் நன்செய் புன்செய் நிலங்கள் தேவதானமாக விடப்பட்டது.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு பந்நிரண்டாவது வடகரை இராசசிங்க வளந

2 ாட்டு உகளூர் கூற்றத்து தத்தநூர் உடைய நாயக பிள்ளையார்க்கு இந்நாட்டுப் பெருமுத்தூர் நன்செய் நில

3 த்துலெ வேலி புஞ்செய் யுள்படத் தேவதாநமாகச் சந்திராதித்தவற் செல்ல விட்ட நில மூந்றுமா

## 15 : 23

**இடம்:** *கருவறை தெற்குச் சுவர் அர்த்தமண்டப முப்பட்டைக் குமுதம் துண்டுக் கல்வெட்டு*

**காலம்:** *பொ.ஆ 12-13ஆம் நூற்றாண்டு*

செய்தி: *பெருமுத்தூர் உடையார் திருச்சங்கீசுரமுடையாருக்கு நாட்டவர்கள் இறையிலியாக நிலம் வழங்கியுள்ளனர்.*

1 நாட்டுக் கீழ் கூற்று பெருமுத்தூர் உடையார் திருச்சங்கீசுரமுடை . . .

2 ழ் இறையிலியாக குடுத்தோம் நாட்டவரோம்.

**15 : 24**

இடம்: *மேற்படி ஊர், பிள்ளையார் கோயில் முன் நடப்பட்டுள்ள கல்*

காலம்: *பொ.ஆ.12-ஆம் நூற்றாண்டு*

செய்தி: *இக்கல்வெட்டு எழுதப்பட்டுள்ள கல்தூண் பெருமுத்தூர் கொல்லர் திருவன் நாட்டார் தர்மமாகும்.*

1 பெருமுத்து– 2 ற் கொல்லர்

3 திருவந் 4 நாட்டார்

5 தம்மம்.

**15 : 25**

இடம்: *மேற்படி ஊர், செல்லியம்மன் கோயில் தூண்*

காலம்: *பொ.ஆ.17-18ஆம் நூற்றாண்டு*

செய்தி: *சுள்ளங்குடியைச் சேர்ந்த அரியப்பிள்ளை மகன் இராமப்பிள்ளை இத்தூண் செய்துவைத்துள்ளார். சுள்ளங்குடி என்ற ஊர் ஏலாக்குறிச்சி அருகே உள்ளது.*

1 சுள்ள 2 ங்குடி

3 அரியப் 4 பிள்ளை

5 குமாரன் 6 ராமபி

7 ள்ளை த 8 ந்மம்.

**15 : 26**

இடம்: *வேப்பந்தட்டை வட்டம், பொன்னகரம் கிராமத்தில் டி. சாமிதுரை குடும்பத்துக்கு சொந்தமான நந்தவனதோட்டம் எனப்படும் நிலத்தில் உள்ள கற்பலகை*

காலம்: *சகவருஷம் 1754, கலிவருஷம் 4933, பொ.ஆ.1832*

செய்தி: *நமையூர் நாட்டு சிறுமுத்தூர் குறிப்பிடப்படுகிறது. இங்குள்ள ஈஸ்வரன் கோயில், சக்தி கணபதி, வரதராஜ பெருமாள் ஆகிய கோயில்களுக்கு திருவிளக்குக்கு நிலம் மற்றும் இலுப்பை தோப்பு கொடுக்கப் பட்டது*

1 சொஸ்திரி சா
2 லி வாகன சகாத்தம் 17
3 54–கலியுகற்த 4
4 933–இதன் மேல் செல்லா
5 நின்ற னந்தன ஷு தையி மீ
6 20 உ குருவார னாள் றோகணி
7 நக்ஷத்திரம் திசமியும் கூடி–
8 ன சுபதினத்தில் நமையூர்
9 னாட்டு பெரியற் பொன் சி–
10 றும் முத்துயூற் திருவிளக்கு
11 யிலுப்பை தோப்பு
12 கிறாம யீஸ்பரன் கோயி–
13 லுக்கு பங்கு ஒன்று னந்தவ–
14 னம் சத்தி கணபதிக்கு பங்கு ஒ–
15 ண்ணு வறதறாச பெ–
16 ருமாளுக்கு பங்கு ஒண்ணு
17 யி நிலம் . . .
18 சாமிக்கு திருவிளக்கு தற்மம்.

## 15 : 27

**இடம்:** *மேற்படி வட்டம், மங்கலமேடு சுந்தரேஸ்வரர் கோயில் கருவறை மேற்கு,தெற்குச் சுவர்கள்*

**காலம்:** *மூன்றாம் குலோத்துங்கன், யா 21, பொ.ஆ 1199*

**செய்தி:** *இக்கோயிலில் சுப்ரமணியப் பிள்ளையாரை எழுந்தருளிவித்து பூஜை வழிபாட்டுக்கு ஒரு சந்தி விளக்கு எரிக்க இவ்வூரில் காணியுடைய மங்கலமுடையான் நெதியன் திருமழபாடி உடையானான பொற்கோயில் நம்பி என்பவர் ஏற்பாடு செய்துள்ளார்.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தே
2 வர்க்கு யாண்டு 21–ஆவது இந்நாயநார் கோயிலுக்கு இவூர் காணி உடைய மங்கல
3 முடையாந் நெதியத் திருமழபாடி உடையானாந பொற்கோயில் நம்பியே
4 ந் ஸுப்ரஹ்மண்யப் பிள்ளையாரை எழுந்தருளிவித்து இப்பிள்ளையார்க்கு வை

5 த்த ஸந்தி விளக்கு 1– ஒன்றுக்கு இக்கோயில் காணி உடைய சிவப்பிராமணந்

6 பாலாசிரியந் பெரியாந் பொந்நம்பலக் கூத்தநேந் உபையங் கொண்ட கா

7 சு–100–காசு நூற்றுக்கும் சந்தி விளக்கு ஒந்றும் இக்கோயிலில் படிகடந்து புக்

8 கார் ஸந்திராதித்யவரை செலுத்தக் கடவதாக உபையங் கைக் கொ

9 ண்டேன் பெரியான் பொன்நம்பல கூத்தனேந் பந்மாஹேஸ்வர ரக்ஷை.

## 15 : 28

**இடம்:** *குன்னம் வட்டம், வரகுபாடி மந்தை வெளி ஐய்யனார் கோயில் வளாகத்துள் தோண்டி எடுக்கப்பட்ட கற்பலகை*

**காலம்:** *மூன்றாம் குலோத்துங்கன் யா 35, பொ.ஆ.1213*

**செய்தி:** *தண்டலையில் காணியுடைய குசவன் பழுவூருடையான் சாளகொற்றேற்றான் என்பவருக்குக் காணியாக இந்த அய்யனார் கோயில் இருந்துள்ளது ஐய்யனார் தெற்றிக்கூத்தரையும் நாச்சிமார் (பூரண, புஷ்கலை) ஆகியோரை கருங்கல்லால் எழுந்தருளுவித்து இக்கோயிலையும் கற்றளியாகக் கட்டியுள்ளார்*

1 திரிபுவன வீர தேவற்க்கு யாண்டு 35–வது கரிகால கன்ன

2 வளநாட்டு வன்நாட்டு தண்டலையில் காணியுடைய குசவன்

3 பழுவூருடையான் சாள கொற்றேற்றான் எந் காணியான ஐய்யநா

4 ர் தெற்றிக் கூத்தரையும் நாச்சிமாரையுஞ் சிலையாலே எழுந்தருளிவித்

5 து இக்கோயில் திருக்கற்றளி செய்விஸத்ீதேந்.

## 15 : 29

**இடம்:** *மேற்படி வட்டம், பரவாய், ஊர் சாலை ஓரம் நடப்பட்டுள்ள தனிக் கல்*

**காலம்:** *பொ.ஆ 18 - 19ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *அரியலூர் தாலுக்காவைச் சேர்ந்த பரவாய் கிராமத்தில் இருக்கும் பேசும் பெருமாள் கோயிலுக்கு இலுப்பைத் தோப்பு கொடுக்கப்பட்டுள்ளது.*

1 வெம்பர் படையச்சி

2 உபையம்

3 ஸ்ரீ முக

4 ஸ்ரீ சித்தறாவற்த்தி ஞூ

5 வையாசி மீ 1
6 5 உ அரியலூர் தா–
7 லுக்காவை சேந்–
8 த பறவாயி கிராம–
9 த்திலிருக்கும் பேசு–
10 ம் பெருமாள் கே–
11 ாவிலுக்கு உபைய–
12 ம் யிலுப்பெ மரம் பத்து–
13 யிதுக்கு யாதாமொ–
14 ருவர் யோசிக்க கூ–
15 டாது

**15 : 30**

**இடம் :** *வேப்பந்தட்டை வட்டம், வெங்கலம் தாராபுரீஸ்வரர் கோயில் வெளிமதிற்சுவர் தென் கிழக்கு மூலையில் நடப்பட்டுள்ள கல்*

**காலம் :** *மூன்றாம் இராசேந்திரசோழன் யா 5, பொ.ஆ 1261*

**செய்தி :** *வெண்குளத்து இராஜராஜ ஈஸ்வரமுடைய நாயனாற்கு பதினெண் பூமி வாணிக நகரத்தார்கள் ஒன்று சேர்ந்து தாங்கள் வியாபாரம் செய்கின்ற பொருள்களில் எருதுப் பொதிக்கு ஒரு காசும், தலைச்சுமைக்கு அரைக்காசும், நடைக்கு அரைக்காசும், ஒழுக்கு அரைக்காசும், வீதம் மகமை விதித்து வசூல் செய்து கொடுத்துள்ளனர் இவ்வூர் வணிக நகரமாக இருந்துள்ளது. வெண்குளம் என்னும் பெயர் மருவி இப்போது வெங்கலம் என ஆகிவிட்டது*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபு–
2 வனச் சக்கரவ–
3 த்திகள் ஸ்ரீஇரா–
4 சேன்திரசோழ
5 தேவற்க்கு யாண்–
6 டு 5 – ஆவது வெண்
7 குளத்து உடையார் இ–
8 ரா[ஜ] ரா[ஜ] ஈசுரமுடை–
9 ய ஞயனுக்கு பதினெண்–
10 பூமி வாணிக ந–
11 கரத்தோம் சமைந்–
12 து குடுத்த பரிசா–
13 வது எரு–
14 துப் பொதி–
15 க்கு ஒருகா–
16 சும் தலைச்
17 சுமைக்கு
18 அரைக்கா–

19 சும் நடை–
20 க்கு அரைக்–
21 காசும் ஒழுக்கு
22 அரைக்கா–
23 சும் இப்படி சம்
24 மதித்துக் குடுத்தோம்
25 வாணிக ந–
26 கரத்தோ–
27 ம் அறமறவற்க
28 . . .
29 . . .
30 . . .

## 15 : 31

**இடம் :** *மேற்படி ஊர் பெருமாள் கோயில் கிழக்குச் சுவர்*

**காலம் :** *விரோதி கிருது வருஷம், பொ.ஆ.19ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *வெண்குளம் கிராமத்தைச் சேர்ந்த பெரிய பண்ணை நாட்டு பெரிய முத்து விஜயமாச்சி ரெட்டியார் மனைவி பெரியம்மாள் கோயில் திருப்பணி செய்தமை.*

1 கலியுகாதி ௵ 4903 இதன் மேல் செல்லா நி–
2 ன்ற விரோதி கிருது ௵ வைகாசி *மீ* தேதி வெண்–
3 குளம் கிறாமத்திலிருக்கும் பெரியபண்ணை நாட்–
4 டு பெரிய முத்து விஜயமாச்சி ரெட்டியாற் பா–
5 ரியாள் பெரியம்மாள் உபயம் ஸ்ரீ றாம ஜெயம்.

# 16. கொழும்பு நூதன சாலை சோழர் கல்வெட்டு

சி. பத்மநாதன், கொழும்பு

இடம்: இலங்கை அனுராதபுரத்திலிருந்து கொண்டு வரப்பட்டு கொழும்பு நூதன சாலையின் கல்வெட்டுப் பிரிவில் காட்சிப்படுத்தப் பட்டுள்ள தூண் அமைப்புக் கல்

காலம்: சோழர், இரண்டாம் இராஜேந்திரன் யா. 2, பொ.ஆ. 1053

செய்தி: இது பாடல் கல்வெட்டாகும். கொப்பத்தில்வென்ற இகலி இராஜேந்திர சோழனின் இலங்கை அதிகாரியான அழகன் புருஷோத்தமன் சீர்பல்லவராயன் மூவேந்த வேளாண் என்பவர் அனுராதபுரத்தில் மும்முடிச் சோழவிண்ணகரம் என்ற திருமால் கோயிலினை எழுப்பி இறைவனுக்கு கவிப்பீலி, குடை முதலியவை கொடுத்துள்ளார்.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ
2 ஏடேறு கொப்-
3 பத்து வென்ற
4 சோழன் இகலி
5 ராஜேந்த்ர தேவ-
6 ற்கி யாண்டிர-
7 ண்டாண்டத-
8 நில் சேடேறு
9 மிலங்கை த-
10 நில் தென் அ-
11 னுராபுரியில் திக-
12 ழ் தர மும்முடி-
13 ச்சோழ விண்ணக-
14 ர் செய்வித்து நீ-
15 டேற வீற்றிருந்-
16 தார் மணவாளர்
17 குடையும் நன்-
18 கமையச் செய்-
19 தவரேவ கவி பீ-
20 லியுஞ் செய்வித்-
21 தான் மாடேற
22 நனி மிலற் கோ-
23 னழகன் புருஷோ-
24 த்தமன் சீர் பல்-
25 லவராயன் மூ-
26 வேந்த வேளேய்
27 ஸ்வஸ்தி ஸ்ரீ



# 17. மலையடிப்பட்டி கல்வெட்டு

மா.பவானி, தஞ்சாவூர்.

இடம்: புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம் மலையடிப்பட்டி திரு. கருப்பையா பாலாண்டார் வீட்டின் கொள்ளைப்புறத்தில் கண்டெடுக்கப்பட்ட தனிக் கல். தற்பொழுது தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டியல் துறையில் வைக்கப்பட்டுள்ளது.

காலம்: பொ.ஆ.11ஆம் நூற்றாண்டு

செய்தி: களக்குடியைச் சார்ந்த நோக்கரியான் என்ற ஆலால சுந்தர மாணிக்கத்தின் இருப்பிடம் களக்குடி என்பதும் இவருக்கு புத்தம்குடி ஊரவர் மாணிக்கத்தான் என்ற பட்டப் பெயர் வைததமைமலையடிப்பட்டிக் கோயிலில் இவர் தேவரடியாராகப் பணியாற்றி இருத்தல் வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்வஸ்தி ஸ்ரீ நோ– | 2 | க்கரியானா[னா]ன |
| 3 | ஆல ஆல சுன்த– | 4 | ரா மாணிக்கத்தி– |
| 5 | ன் அகம் களக்– | 6 | குடி புத்தம் |
| 7 | குடி ஊரவர் | 8 | பேர் |



# 18. காஞ்சிபுரம் ஸ்ரீ கைலாசநாதர் கோயில் துண்டுக் கல்வெட்டுகள்

**ஆர். மணி, காஞ்சிபுரம்**

**18 : 1**

**இடம்:** *காஞ்சிபுரம் மாவட்டம், காஞ்சிபுரத்தில் உள்ள ஸ்ரீ கைலாசநாதர் கோயிலில் உள்ள கற்குவியலிருந்து கிடைக்கப் பெற்ற கல்*

**காலம்:** *பொ.ஆ.10ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *கோயிலுக்கு பொன் வழங்கப்பட்டு அப்பொன்னின் மூலம் பெறப்படும் வட்டிப் பணத்தைக் கொண்டு கோயிலுக்கு நெய்வேத்தியம் செய்துள்ளமை*

1 – எயிற் கொட்டத்து எயில் நாட்டு நகரம் காஞ்சிபுரத்துப் பெரிய திருக்கற்றளித் தேவர் கணக்கு கெ–

2 – ம் கடளங்குடித்தமோதிரப்பட்டனும் ஒப்பிட்டுப் புகுந்தகேழ்விப் படியே வரியி லிட்டுக் கொள்க வென்று அதிகா–

3 – தூணிப் பதக்கும் கெலாமகும் பதினுற்றிடப் பொன் ஒரு மாவினுக்கு நெல்லறு நாழியும் ஸொம கும்பத்துக்குப் பால்–



**18 : 2**

**இடம்:** *அதே இடம்*

**காலம்:** *இராசகேசரி, யா. 3, பொ.ஆ. 11ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *கோயிலுக்கு பொன், நெல் போன்றவற்றை தானமாக வழங்கிய செய்தியைக் கூறுகிறது.*

1 – வா கூ பொ . . .

2 – கோவிராசகேசரி பந்மற்க்கு யாண்டு 3 வது காண. . .

3 – ங் கலத்து ஊரோம் கைஎழுத்து காஞ்சிபுரத்து–

4 – ங்க கொண்டு கடவ பொன் 15 பதினைஞ்–

5 – ழுஞ்சுனுக்கு இ தேவர்க்கு சந்தர[ா] தித்த அளவும் நிசதம் . . .

6 – வளாகமுடையார்க் கால்லோடொக்கும் உழக்காலேய் ஒரு நாழி–
7 – ன் இவ்வூர் கூட்டத்தான் மானதொங்கங்கல மல்லெனேன்



18 : 3

இடம்: அதே இடம். மற்றொரு கல்வெட்டுத் துண்டு.

காலம்: பொ.ஆ. 11ஆம் நூற்றாண்டு

செய்தி: கோயிலுக்கு தேவதானம் கொடுத்தமை.

1 ப்பா கோபரகேசரிவர்ம்மர் ஸ்ரீ ரா[ஜே] . . .
2 று ஆவது முதல் தே₃வதாநமாக விட்ட . . .
3. நெல்லு முகுறுணி யும் மேற்ப்படி
4. ம் சந்திரா . . . அரிசிஇருநாழி . . .



## 18 : 4

இடம் : அதே இடம்

காலம் : பொ.ஆ. 11ஆம் நூற்றாண்டு

செய்தி : இறையிலியாக கோயிலுக்கு நிலம் கொடுத்தமை

1 ஐந்திர சோழ தே . . .

2 யிலியா [க] கொள்கவென்று தி . . .

3 ன கிழட்ட அரிசி நாழிக்கு நெ . . .

4 யும் . . . அரிசிக்குறுணி . . .

## 18 : 5

இடம் : அதே இடம்

காலம் : பொ.ஆ. 11ஆம் நூற்றாண்டு

செய்தி : கோயிலுக்கு நிவந்தங்கள் மற்றும் நெய்வேதியம் செய்வதற்கு காசு கொடுத்தமைப் பற்றித் தெரிவிக்கிறது.

1 . . . வது நாள் நூற்று ஏழினால் அதிகாரிகள் சிறிஞார் கிழவர் காஞ்சிபுரத்து கோயிலுனுள்ளா

2 . . . ஈனங் திருமந்திர வோலை யருமொழி விழுப்பரையரெழுத்தினாலும் திருமந்திரவோலை நாயகன் வில்லவ

3 . . . கும்ப$_4$த்தின் கீழட்டநெல்லு குறுணியும் சோம கும்பஞ் சூழ் னூலோரு பல

4 . . . ணிக்கு நெல்லு இருதூணிப் பதக்கும்.

## 18 : 6

இடம் : அதே இடம்

காலம் : பொ.ஆ. 11ஆம் நூற்றாண்டு

செய்தி : கோயிலுக்கு நிவந்தங்கள் மற்றும் நெய்வேதிதியம் செய்வதற்கு காசு கொடுத்தமை.

1 . . . ட்டு இத்தேவர் தேவதானஊர்களிலார் தேவற்க்கு . . . கடவ நெல்—



2 . . . திகள் ராஜராஜ மூவேந்த வேளாரும் நடுவிருக்குங் கோட்ட

3 . . . ப போனகத்துக்கு அரிசி இருநாழிக்கு நெல்லஞ்ஞாழியும் பால்ப் போனகத்துக்கு பருப்பு உரிக்கும்

## 18 : 7

இடம்: மேற்படிக் கோயிலின் திருச்சுற்றுச் சிறு கோயில்களில் தெற்கு வரிசையில் 21க்கும் 22க்கும் இடைப்பட்ட வலது பக்கச் சுவர்

காலம்: குலோத்துங்க சோழன், யா. 5, பொ.ஆ. 11ஆம் நூற்றாண்டு

செய்தி: குலோத்துங்க சோழ மன்னன் எழுந்தருளிவித்த இறைவனுக்கு கொடை வழங்கியமை

1 ஸ்வஸ்திஸ்ரீ சுங்க[ந்]த் தவுர்த்த குளோத்து–

2 ங்கச் சோழதேவர்க்கு யாண்டு ஐந்து

3 வது கச்சிபுரத்தில் இராச சிம்ம மீச்ச . . .

4 ரமுடைய னாயநார் கோயில்லின் னா–

5 ம் எழுந்தருளப் பண்ணின நாயனார் பு–

6 குளோத்துங்க சோழிச்சுரம் முடைய [நா]

7 யனார்க்கு . . .

8 ம . . .



# 19. திருமங்கலம் கல்வெட்டு

ப. சாயிகவிதா, தஞ்சாவூர்

இடம் : *திருச்சி மாவட்டம், லால்குடி வட்டம், சாமவேதீஸ்வரர் கோயில் அர்த்தமண்டப வடக்குச் சுவர் முப்பட்டைக் குமுதம்*

காலம் : *முதலாம் குலோத்துங்கன், யா : 17, பொ.ஆ. 1087*

செய்தி : *திருமங்கலத்து பெருங்குறி மகாசபையார் இவ்வூர்ப் பரசுராமீஸ்வரமுடைய மகாதேவர் கோயிலுக்கு இறையிலியாக நிலம் விற்றுக் கொடுத்தனர் இவ்வூர்ச் சபை இவ்வூரில் இருந்த திருவயோத்தி ஆழ்வார் கோயிலில் கூடி இந்நில விற்பனைக்கான தீர்மானத்தை இயற்றியமை*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ புகழ்மாது விளங்க ஜயமாது விரும்ப நிலமகள் வளர மண்மகள் புணர உரிமையில் சிறந்த மணிமுடிசூடி மீனவன் கெட வில்லவன் குலைதர எம்மன்னர் எரியலுற்றிழி தர திக்கனைத்துந் சக்கர நடாத்தி வீர ஸிங்ஙா ஸநத்து உலகு

2 முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய கோப்ப[ர] கேசரி பன்மரான சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்குயாண்டு 17–வது உலகு முழுதுமுடைய வளநாட்டு கலாற் கூற்றத்து ப்ரம்மதேசம் திருமங்கல–

3 த்து பெருங்குறி மஹாஸபையோம் துலா நாயற்று பூர்வ பக்ஷத்து சதுர்த்தியும் வியாழக்கிழமையும் பெற்ற மகத்து நாள் இவ்வூர் திருவோத்தி யாழ்வார் கோயிலிலே கூட்டக்குறைவறக் கூடி இரு–

4 ந்து இவ்வூர் பரசிராமீஸ்வரமஹாதேவர்க்கு முலவிருத்தியாயுள்ள சண்டேஸ்வரதேவர் ஸ்ரீமுகத்தால் கொண்ட காசு 23 இக்காசு இருபத்து மூன்றுக்கும் இத்தேவர்க்கு விற்றுக் குடுத்த புன்செய் நிலமா–

5 வது இவ்வூர்த் திருவோத்தி ஆழ்வார் கோயிலுக்கு மேற்கு எண்முழக் கோலாலே குழி முன்னூற்றெழுபத்து அஞ்சும் விற்றுக் கொடுத்து இக்காசு இருபத்து மூன்றும் இஸபையோமே கைக்கொண்டு இதி–

6 னால் வந்த பலிசைக்கு யாண்டு 17–வது மாசி மாத முதலாக இறையிழிச்சி இறையிலி தேவதானமாகவும் இன்னிலம் கட்டி வந்த இறையும் எச்சோறும் மற்றும் எற்பெற்பட்டனவும் இஸ்ஸபையோமே

7 இறுத்துக் குடுக்கக் கடவோமாக இப்பிராமாணப்படி நிலம் [இறையிலி] செய்து குடுத்தோம் பரசிராமீஸ்வரத்து மஹாதேவர்க்கு திருமங்கலத்து ஸபையோம் இந்த தம்மம் மஹாஸபையார் ரக்ஷை பன்மாஹேஸ்வர ரக்ஷை.

# 20. காஞ்சிபுரம் மாவட்டத்தில் கல்வெட்டுகள்

கி. குமார், சென்னை

**20 : 1**

**இடம்:** *காஞ்சிபுரம் மாவட்டம், திருப்பெரும்புதூர் வட்டம், பொன்னலூர் திருவகத்தீஸ்வரமுடையார் கோயிலின் மண்டபத்தின் மேற்கு- தென்மேற்கு வெளிப்புறச் சுவர், பட்டிகை மற்றும் ஜகதி.*

**காலம்:** *இராண்டாம் இராஜேந்திரன், 11ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *இரண்டாம் இராஜேந்திரனின் ஆட்சிக் காலத்தில் செங்காடு நாட்டைச் சார்ந்த இருங்காடான உலகளந்த சோழச் சதுர்வேதி மங்களத்து மஹாசபையார் இதே நாட்டைச் சேர்ந்த பெருநல்லூரான கேரளாந்தக நல்லூர் திருவகத்தீஸ்வரமுடைய மஹாதேவர் கோயிலின் பண்டாரத்திலிருந்து பொன்னைப் பெற்றுக்கொண்டு அக்கோயிலுக்கு இறையிலி தேவதானமாக நிலம் விற்றுக் கொடுத்தமை*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ இரட்டபாடி ஏழரையிலக்கமுங் கொண்டு . . . பேராற்றங்கரைக் கொப் . . .

2 . . . தஆனையுங் குதிரையும் பெண்டிர் பண்டாரமுங் . . . கொண்டு விஜயஅபிஷே . . .

3 நத்து வீற்றிருந்தருளிய கோப்பரகேஸ்வரிவர்மமராந் உடையார் ஸ்ரீராஜேந்தர தேவற்க்கு யா . . .

4 சோழமண்டலத்து செங்காட்டுக் கோட்டத்து செங்காடு நாட்டு இருங்காடாந உலகளந்த சோழச் சருப் . . .

5 யோம் நிலவிலையாவணக் கையெழுத்து இக்கோட்டத்து இந்நாட்டு பெருநல்லூரான கேர . . .

6 முடைய மஹாதேவர் பண்டாரத்துப் பொந்கொண்டு இத்தே[வ]ற்க்கு வேண்டும் நிமந்தம் செ. . .

7 றஇலி ஆக விற்றுக்குடுத்த நிலம் . . . பதிற்கு[வி] லை பெ. . .

8 [ஏ]ரிநீர் கொள[த்து]க்கு மேற்கும் தெந்பாற்கொல்லை . . . ளாந்தக நல்லூர் எல்லைக்கு வ. . . பாற்கெல் . . .லை உள்ளும் மேல்ப்பா . . .

9 க்கு இழக்கும் வடபாற்கெல்லை ஆந மேட்டுச் சேரிக்கு புகுந்த வதிக்கு தெற்கும் இ . . .லை உள்ளுமகப்பட்ட . . .

10 யந் பள்ளத்தில் சூர்ய தேவந் செறுவிந் தெற்க்கில் தடி விற்பதற்க்கு

கீழ்பாற்கெல்லை எங்களூர் நிலத்து . . .

11 [ெ]தந்பாற்கெல்லை கேரளாந்தக நல்லூர் எல்லைக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை மேற்படியூர் எல்லைக்கு கிழக்கு . . .

12 லை சூர்யதேவந் செறுவுக்கு தெற்கும் இந்நான்கெல்லை உள்ளுமகப்பட்ட நிலம் தடி ஒன்றிநாற் குழி நூற்றெ . . .

13 ந் மேட்டுச்சேரி அகமனை விற்பதற்கு கீழ்பாற்கெல்லை கோயிலிந் மேலைப்புத்து கீழ்வரம்பிந் கொ. . .

14 த்ததுக்கு மேற்கும் தெந்பாற்கெல்லை ஆந மேட்டுச்சேரிக்கு பகுந்தவதிக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை . . .

15 பிரமதேய தேவதாநம் பகவந்தநேரிச் செறுவுக்கு கிழக்கும் வடபாற்கெல்லை நீரோடுகாலுக்கு தெற்க்கும் இந்நான்கெல்லையுள்ளு . . .

16 மகப்பட்ட மனையும் பெறுவிலைக் காணங் கிழிகையில் செலக்கொண்டு இறையிலியாக திருவகத்தீஸ்வரமுடைய மஹாதேவற்க்கு விற்றுக்கு

17 டுத்தோம் இந்நிலத்துக்கு எங்களூர் ஏரிநீர்பாயப் பெறுவதாகவும் இந்நிலத்தக்கு நீர்விலைகொள்ளப் பெறாததாகவும் இந்நிலம் உழு . . .

18 ங்குடிகள் வெட்டி முட்டைஆள் எச்சோற்றுக் கூற்றுநெல்லு தலைவரி வேலிக்காசு உள்ளிட்டு மற்றும் யாதொன்றுங் கொள்ளப்பெறாததா. . .

19 கவும் இப்பரிசு இசைந்து கேரளாந்தக நல்லூர் திருவகத்தீஸ்வரமுடைய மஹாதேவற்கு இறையிலி தேவதாநமாக விற்றுக்குடுத்தோம் இருங்காடாந . . .

20 உலகளந்த சோழச் சருப்பேதிமங்கலத்து மஹாஸபையோம் இந் நிலம் தேவதாநமற்ஜாதி அநுபவிக்கப் பெறுவதாக குடுத்தோம் மஹாஸபையோம் இ.

21 வை . . .ாட்டு நாவலூர் சிவபிராமணந் காஸ்யபந் தும்ப பட்டநேந் இவை எந்எ. . .

## 20 : 2

இடம்: *மேற்படிக் கோயிலின் மண்டபத்தின் கிழக்குப் பக்கச் சுவரின் தென்கிழக்குப் பகுதி*

காலம்: *கோப்பரகேசரிவர்மன் ஸ்ரீ அதிராஜேந்திரன், யா. 3, பொ.ஆ. 1069*

செய்தி: *சோழ மண்டலத்து உய்யகொண்டான் வளநாட்டு அம்பர் நாட்டு இளையான்குடியைச் சேர்ந்த மகேந்திரன் சங்கராம கேஸரி என்கிற ஜயசிங்க குலகாலப் பல்லவரையன் என்ற அதிகாரி இருங்காடாகிய உலகளந்த சோழச் சதுர்வேதிமங்கலத்தில் உள்ள*

*நிலப்பகுதியை அவ்வூர் மஹாசபையாரிடமிருந்து விலைக்கு வாங்கி அதனை இறையிலி தேவதாநமாக கேரளாந்தக நல்லூரில் உள்ள திருவகத்தீஸ்வரமுடைய மஹாதேவர் கோயிலுக்கு கொடையாக அளித்தமை*

1 [ஸ்வஸ்தி]ஸ்ரீ திங்களேர் மலர்ந்து வெண் குடை மண்டிலமின்னுயிர்த் தொ[று] மின்நறுள் கரந்து நிறைநிழல் நாட்டியின்னுயிற் குழுமை–

2 யிற் செங்கோலோச்சித் திசைதொறுஞ் செல்லத் தங்குலமுதற் பருதியில் வல்நேர் முநிவற்கு மேந்முறை–

3 யூட்டி மற்றவர் திருமறைச் செல்வியு யாநிந்ற கோவையுங் கீர்த்தியு மிருநிலப்பாவையுங் கிள்ளையும் போர்த்தநிப் பாவையு மதுவை–

4 யிற்பொதுமை திரத்துத் தந்நுரிமையிற்றேவியாக மரபிநிற் சுடர்மணி மகுடஞ்சூட்டி நெடுமுடி மந்நவர் முறைமுறை தந்நடி வணங்க–

5 வீரமுந் தி[யாக] முமாரமெ;ப் புணர்ந்து மாப்பெரும்புகழ் மனுவுடந் வளர்த்த கோப்பரகேசரி வர்ம்மராந உடையார் ஸ்ரீஅதிராஜேந்திர தேவற்கு யாண்டு மூ–

6 ன்றாவது[ஜெ]யங்கொண்ட சோழ மண்டலத்து செங்காட்டுக் கோட்டத்து செங்காட்டு நாட்டு உலகளந்த சோழ சதுர்வேதி மங்களத்து மஹா

7 . . . து சோழ மண்டலத்து உய்யக்கொண்டாந் வளநாட்டு அம்பர் நாட்டு இளையாந்குடி இ . . .

8 . . . ந ஜயஸிம்ஹ குலகாலப் பல்லவரையந் இக்கோட்டத்து இந்நாட்டு கேரளாந்தக நல் . . .

9 . . . திருவந்தியர் மர்ம்ஹபூஜிக்க நித்த[ம்] திருவமுது நாநாழிக்கும் நெய்யமுது ஆழாக்கும் ஒ . . .

10 . . . யமுது ஐஞ்சுக்கும் வெற்றிலையமுது பத்துக்கும் திருமஞ்சன நீர் சுமப்ப . . .

11 . . .க்கு அரிசி உரிக்கும் நெய் ஆழாக்கு நித்தியநிமந்தமாந பெறுவிலைக் காணங் கிழி கை . . .

12 . . . த நிலமாவது கீழ்ப்பாற்கெல்லை . . .ணாராயணக் குண்டிலிந் மேல் வரம்புக்கும் குமார . . .

13 ம்விணையந் மட்டத்து மேல்வரம்புக்கும் இரவிமுடங்கொ[ல்]லை வரம்புக்கு மேற்கு தெந்பாற்கெல்லை கேரளாந்தக நல்லூர் எல்–

14 லைக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை மேற்படியூர் ஏரிக்கு கீழ்ப்பாற்கெல்லை வண்ணக்கன் வதிக்கு தெற்கும் ஆக இந்நான்கெல்லை உள்–

15 ளதும் நடுவுபட்ட நிலம் பெறுவிலைக் காணங் கிழி கயிற் கைக்கொண்டு இறையிலி தேவதாநமாக கேரளாந்தக நல்லூர்

16 திருவகத்தீஸ்வரமுடைய மஹாதேவற்கு இளையாங்குடியாந் மகேந்திரந் சங்கறாம கேஸரியான ஜயஸிங்க குலகாலப் பல்லவரை–

17 யனுக்கு விற்றுக் குடுத்தோம் மஹாசபையோம் இந்நிலத்துக்கு எங்களூர் ஏரிநீர்ப்பாயப் பெறுவதாகவும் இந்நிலத்துக்கு நீர்விலைக் கொ–

18 ள்ளப் பெறாதோமாகவும் இன்நிலமுழுங் குடிகளை வெட்டிமுட்டையாள் எச்சோற்றுக் கூற்றுநெல்லுத் தலைவரி வேலிக்காசுள்ளிட்ட இ–

19 . . .றுங் காட்டவுங் கொள்ளப்பெறாதோமாகவும் இப்பரிசு விற்றுக் குடுத்தோம் இருங்காடாகிய உலகளந்தச் சோழச் சதுர்வேதி மங்க–

20 லத்து ஸபையோம் இவைப் பணிப்பணியால் பணிக்க என இவூற் கரணத்தாந் பெரும்பூதூருடையாந் பொந்நிளவந் சரவணனேன்

## 20 : 3

**இடம்:** *மேற்படிக் கோயிலின் மண்டபத்தின் தெற்குச் சுவர் நுழைவாயிலுக்கு மேற்குப் பகுதி*

**காலம்:** *முதலாம் குலோத்துங்கன், யா 20, பொ.ஆ.1090*

**செய்தி:** *கேரளாந்தக நல்லூரைச் சேர்ந்த சிவந்தாங்கிழவன் மாதேவன் மாணிக்கன் என்பவர் இருங்காடான உலகளந்த சோழச் சதுர்வேதி மங்களத்து மஹாசபையாரிடமிருந்து சில நிலப்பகுதிகளை வாங்கி அதனை இறையிலி தேவதான நிலமாக திருவகத்தீஸ்வரமுடையார் தேவஸ்தானத்தில் எழுந்தருளிய விக்நேஸ்வரர்க்கு தினமும் திருவமுது மற்றும் கறியமுது படைப்பதற்காக கொடை கொடுத்தமை*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திருமந்நி விள[ங்கு]ம் இருகுவ டனையதந் தோளும் வாளுந் துணையெனக் கே[ள]லர் வஞ்சனை கட–

2 ந்து வயிராகரத்தில் குஞ்சரக் குழா[ம்]பல வாரி அஞ்சலிற் சக்கரக் கோட்டத்துத் தாராவரைசனைத் திக்கு நிகழத்[தி]றை கொண்டருளி அ–

3 ருக்க னுதையத் தாசையிலிருக்கும் கமலமனைய நிலமகள் தன்னை முந்நீர்க் குளித்த வந்நாள் திருமாலாதிக் கேழலாகி எடு–

4 த்தன்ன யாதுந் சலியா வகையினிது எடுத்துத் தந்குடை நிழலில் இன்புற விருத்தித் திகிரியும் புலியுந் திசைதொறும் நடாத்தி–

5 ப்புகழுந் தருமமும் புவிதொறு[ம்] நிறுத்தி வீரமுந் தியாகமுமானமுங் கருணையும் [தன்] உரிமைச் சுற்றமாகப் பிரியாத் த[ரா]தலநிகழ் ஐயமுந்தாநும் வீற்றிருந்த–

6 ருளிக் குலமணி மகுடமுறைமையிற் தந்கழல் தாராதிபர் சூடச் செங்கோல் நாவலம் புவிதொறு[ம்] நடாத்திய கோராஜகேஸரி வர்ம்மராந உடையார் ஸ்ரீராஜேந்திர சோழ தேவற்–

7 கு யாண்டு இரு[பதா]வது ஜயங்கொண்ட சோழ [மண்]டலத்துச் செங்காட்டுக் கோட்டத்து செங்காடு நாட்டு உலகளந்த சோழச் சதுர்வேதி மங்களத்து மஹாஸபை–

8 யோம் நில . . . ஆவணக் கைஎழுத்து இக்கோட்டத்து இந்நாட்டுக் கேரளாந்தக [நல்லூர்]ச் சிவந்தாவ கிழவந் மாதேவந் மாணிக்கந் . . . த்திருவகத்தீஸ்வரமு–

9 டைய மஹாதேவர் ஸ்தாநத்து எழுந்தருளி இருக்கும் விக்நேஸ்வரர்க்கு நிசதி திருவமுது அரிசி இருநாழிக்கும் கறியமுது ஒன்றுக்கும் நிச்சல நிவந்தமாகப் பெறுவி–

10 லைக் காணங் கிழி கையிற் செல்லக் கைக்கொண்டு நாங்கள் விற்றுக்குடுத்த நிலமாவது கீழ்பாற்கெல்லை கொம்புறத்துக் காமக்கோட்டக் கிரமவித்தந் கழுவலுக்கும் இதந் தெற்கில்

11 சிறுகுண்டிலுக்கும் இதந் தெற்கில் தாமோதிரையந் கழுவலிந் மேல்வரம்புக்கு மேற்கும் தெந்பாற்கெல்லை செங்காட்டுக் கேரளாந்தக நல்லூர் எல்லைக்கு வடக்கும் மேல்

12 பாற்கெல்லை திருவகத்தீஸ்வரமுடைய மஹாதேவற்கு நாங்கள் அந்நயாமத்துக்கு விற்றுக்குடுத்த நிலத்துக்கு கிழக்கும் வடபாற்கெல்லை வண்ணக்கந் வதிக்கு தெற்கும் இந்நாற்கெல்லை

13 யுள்ளும் நடுவுபட்ட நிலம் பெறுவிலைக் காணங் கிழி கையிற் செல்லக் கைக்கொண்டு இறையிலி தேவதாநமாக கேரளாந்தக நல்லூர்த் திருவகத்தீஸ்வரமுடைய மஹாதே–

14 வர் ஸ்தாநத்து எழுந்தருளி இருக்கும் விக்நேஸ்வரர்க்கு இக் கோட்டத்து இந்நாட்டு[க்] கேரளாந்தக நல்லூர்ச் சிவந்தாங்கிழவந் மாதேவந் மாணிக்கந்நுக்கு விற்றுக்குடுத்தோம்–

15 மஹாஸபையோம் இந்நிலத்துக்கு எங்களூர் ஏரிநீர்ப் பாயப்பெறுவதற்கு இந்நிலத்துக்கு நீர்விலை கொள்ளப்பெறா தோமாகவும் இந்நிலம் உழுதகுடிகளை வெட்டி முட்டையாள்

16 . . . காசு உள்ளிட்டு யாதொற்றுங் காட்டவுங் கொள்ளவும் பெறாதோமாகவும் . . . படி . . . விற்றுக் குடுத்தோம் இருங்காடாகிய உலக . . .

17 . . . ஸபையோம் இவை பணிப்பணியால்ப் பணிக்க எழுதிநேந் இவ்வூர்க் கரணத்தான் பெரும்பூதூருடையாந் பொந்நிளவந் தானையநேந் இவை

## 20 : 4

இடம்: *மேற்படிக் கோயிலின் மண்டபத்தின் தெற்குச் சுவரில் நுழைவு வாயிலுக்கு கிழக்குப் பகுதியில் சுவரின் வெளிப்புறம்*

**காலம் :** *பொ.ஆ.11ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *அரசனின் பெயரோ ஆட்சியாண்டோ இக்கல்வெட்டில் குறிப்பிடப்படவில்லை கேரளாந்தக நல்லூரில் உள்ள திருவகத் தீஸ்வரமுடைய மஹாதேவர்க்கு அர்ச்சனா போகத்துக்கும், திருவமுது படைப்பதற்கும் கோயிலில் திருவிழா நடத்துவதற்கும், திருவிழாவின்போது திருவகத்தீஸ்வரர்க்கு தயிரமுது, கயிரமுது படைப்பதற்கும், ஸ்ரீபலி செய்வதற்கும், திருவிழாவின் முடிவில் பிராமணர்களுக்கு உணவு அளிப்பதற்கும் இவ்வூரின் பல பகுதிகளில் உள்ள நிலங்கள் கொடையாக வழங்கப்பட்டமை.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ செங்காட்டுக் கோட்டத்து செங்காடு நாட்டு கேரளாந்தக நல்லூர் திருவகத்தீஸ்வரமுடைய மஹாதேவற்க்கு அற்ச்சநா போக–

2 த்துக்கும் திருவமுதுக்கும் வைத்த நிலம் பனங்குழிக்குண்டில் குழி நாறப்த்தொன்றேகாலும் அரைசொட்டைக் குண்டில் குழி மு–

3 ப்பத்தொன்பதும் பருத்திமேட்டுச் செறுகுழி நுற்றறுபத்து மூன்றரையே அரைமாவும் இதந் மேலது குழி நூற்றைம்ப–

4 த்திரண்டரையும் பொன்னாலியின் கீழது குழி நாற்பத்தைஞ்செழுக்காலும் அனுக்கி தோட்டப்பாழ் குழி முப்பத்தெட்டே மு–

5 க்காணி நாலு மாவும் சாணியிந் கீழை மட்டங்குழி எண்பத்தி இரண்டு மாவும் பொன்னாலியிந் மேலது குழி எண்பதந்தைஞ்ச–

6 ரையும் குவளைகிழாந் செங்குழி நூற்றுமுப்பத்திரண்டே அரைக்காலும் தானறி ஏரி தெற்க்கிலது குழி பதிநெட்டும் புத்தேரி தூ–

7 ம்பிந் [வட]க்கில் முன்மடை மட்டங்குழி ஐம்பதரையே அரைக்காலும் புத்தேரியிந்கீழை பட்டங்கையாந் செறுகுழி இருநூற்றுத் தொண்–

8 ணூற்றெ[றாண்]றரையே மாகாணியும் பருத்தி மேட்டுக் களத்திந் மேலது குழி எழுபதேகாலும் புத்தேரியிந் தெற்க்கில் மட்டங்குழி தொண்ணூற்றொ–

9 ந்றோஎழு[பத]ரையும் இதந்மேலே சிறுகுண்டில் குழி நாற்பத்தெட்டே முக்காலும் அரைசொட்டைச் செறுகுழி நூற்றுத் தொண்ணூற்றொந் பதரையும் [இ]தந்–

10 தெற்கில் . . . . ஐம்பத்தொன்றும் விருகமாந் செறுகுழி இருநூற்றிருபத்தாறே எழுமாவரையும் இதந் கீழை சிறுகுண்டில் குழி இருபத்தாறு . . . வதி–

11 . . .பத்தெ எழுமாவரையும் மா . . .

12 இ . . . நாலும் செறுவிந் மட்டத்திந் தெற்கில் கழுவல் குழி ஐம் . . .ட்டு இள[ளை]க்காணி கீழைக் குழி இருப . . .கீழது குழி நூற்றொந்றே எட்டு மாமுக்காணி–

013 வெ. . .த்தைஞ்சும் இதந் கீழது குழி நாற்பத்தெட்டும் இதந் . . . இளனையர் ஏரி கீழை மட்டங்குழி தொண்ணூ . . .று மூன்றரையே மாகாணியும் வெட்டை . . .

14 யுந் . . . றொந்பதும் இவ்வேரி கீழைச் செறுகுழி நூற்றிருபது . . .ல்மேலை முக்கிகுழி தொண்ணூற்றிரண்டும் கா . . . இதந் வடக்கில் இதந்வடக்கிலது குழி இரு . . .

15 ய . . . ல்லேரி எதிர்வாய் நீர்கொள்ளிகுழி இருபத்து நாலும் . . .து நாலரையே நாலுமாவும் பெருங்கிநறு . . . மாகாணி அரைக்காணியும் கல்லேரியெ . . .

16 பத் . . .ந் மட்டத்திந் கீழை நீர்கொள்ளிகுழி முப்பத்தாறே எட்டு . . .ய்க குண்டில் குழி அறுபதும் விராட்டி நங்கை . . .யும் ஏரி அகவாய் நீர்கொள்ளிகுழி இருப . . .

17 திர . . .யிதந் தெற்கில் நீர்கொள்ளிகுழி முப்பத்தொந்றரையும் . . .தட்டும் பொன் நங்கையிந் கீழது குழி மு . . . காலிந் கீழை முக்கிகுழி நூற்றொருபத்தெ . . .

18 த இ . . .ப்பத்து மூன்றேமுக்காலும் சிறியாச்சி ஏரிக்குப் போந்த வடபுலத்து எல்லைவாய் முக்கிகுழி அறுப . . . நாநாழிக்கு வைத்த ஏரி கீழைச்செறு . . .

19 ட்டுப் . . .த்தைஞ்சம் திரிபுவநஸுந்தரற்க்கு திருவமுது அரிசி . . . நால் குழி முன்னூற்று நாற்பத்து நாலும் . . . நாநாழிக்கு வைத்த ஏரி கீழைச் செறு . . .

20 டி இ . . . துகாவிளையும் முழுவூரி. . . வதாகவும் . . .க்கு திருவமுது அரிசிநா . . . செறுகுழி நூற்றிஇருபத்திரண்டே முக்காலும்–

21 மாகாணியும் கத்திகுண்டில் குழி நாற்பத்திர[ண்]டேகாலும் பெருங்காலிந் வடக்கில் . . . தேகாலும் அங்காடிகுழி நூற்றைம்பத்தேழும் கா–

22 ளந் மாறந் பநங்குழி குண்டில்குழி நாற்பத்தேழு காலே இரண்டு மாவும் கம்பந் . . .க்குண்டில் குழி நாற்பத்தெட்டே காலும் மாம்பாக்கிழ–

23 ாந் பெருங்காலிந் தெற்கிலது குழி இருபத்துநாலே அரைக்காலும் கறியமுதுக்கு வைத்த நிலம் தோட்டப்பாழ் குழி ஐம்பத்தெழே அ. . .

24 ரைக்காலும் தயிரமுதுக்கு வைத்தநிலம் பழஉளருணி எதிர்வாய் மட்டங்குழி . . . காலே மாகாணியும் திருவிழா முடிவில் தீர்த்ததிநா . . .

25 பிராமண போஜநத்துக்கு வைத்த நிலம் படைவீரியந் வடக்கிலது குழி . . .ஞ்சும் திருநந்தவாநப்புறம் புத்தேரித் தூம்பிந்–

26 தெற்கிலது குழி தொண்ணூற்றைஞ்சரையே மாகாணியும் திருநுந்த . . . விளக்குப்பட்டி செம்பூதந் செறுகுழி நூற்றுமுப்ப–

27 த்து நாலேகாலும் பருத்திமேட்டு முக்கிகுழி எண்பத்துநாலே . . .

28 குழிக் குண்டில் குழி நூற்றரையே முக்கா . . . காணி அரைக்காணியும் அம்மன்டைசெறு குழி நூற்றருபத் . . . மேட்டுச்–

29 செறு குழி இருநூற்றறுபத்தாறேகாலும் மயிலுணி மேட்டு மட்டங்குழி நூற்று முந்றே முந்று மாகாணி அரைக்காணியும் இதந்மேலதுக் குழி–

30 நாற்பத்தாறே ஆறு மாகாணியும் இதந் வடக்கிலது குழி அறுபத்தைஞ்சே முக்காலே ஒரு மாகாணியும் கண்டமையந் உழவாந செறுவிந் மே–

31 லது குழி அறுபத்தைஞ்சே முக்கால் மூன்று மாவரைக் காணியும் ஸ்ரீபலிபட்டிக்கு வைத்த நிலம் ஞாணி ஆந செறுகுழி நூற்றறுபத்தெட–

32 டரையும் இதந் கீழது குழி எண்பத்தொந்றரையே மூன்றுமாவும் இதந் தெற்கிலது குழி நூற்றுமூன்றரையும் அரசொட்டை மட்டங்குழி எண்பத்தி–

33 ரண்டே முக்காலும் மரத்தொட்டைச் செறு குழி இருநூறும் பொந்நாலி குழி நூற்றெண்பத்தைஞ்சே எழுமாவும் இதந் தெற்கிலது குழி ஐம்ப–

34 த்து மூன்றே எட்டு மாவும் முச்சந்திர செறுகுழி நூற்றிரண்டும் பெருங்காலிந் வடக்கில் குண்டில் குழி நாற்பத்து நாலும் மாத்துழாந் களத்திந் கீழ–

35 து குழி இருபதும் மோடி நங்கையன்செறு குழி நூற்றறுபத்தேழே மூந்று மாவும் மாத்த . . . மேலது குழி தொண்ணூற்றே–

36 . . .லும் திருவிழாபட்டியு . . .யெந் தெற்கிலது குழி நூ . . . திருவிழாவுக்கு . . .

37 ஆணைக் கூட்டத்தின் மேலது குழி அறுபதும் . . .

[முற்றுப் பெறவில்லை]

## 20 : 5

**இடம்:** *காஞ்சிபுரம் மாவட்டம், காஞ்சிபுரம் வட்டம், சாலபோகம் கிராமத்தில் காஞ்சி கைலாசநாதர் கோயிலுக்கு அருகே புத்தேரி என்ற ஊருக்குச் செல்லும் சாலையின் மேற்குப் பகுதியில் உள்ள தெருவின் சந்தில் நடப்பட்டுள்ள கற்பலகை.*

**காலம்:** *பொ.ஆ 1808*

**செய்தி:** *ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் சுவபதாரராகப் பணியாற்றிய நல்லாமூர் முத்தால நாயக்கர் என்பவருக்கு கைலாசநாதர் கோயிலுக்கு மேற்கே உள்ள சாலாபோகம் மற்றும் புத்தேரி ஆகிய ஊர்களைச் சேர்ந்த சில நிலப் பகுதிகள் ஆங்கிலேய அரசால் வழங்கப்பட்டமை*

1 1808
2 ன் மீ 32 ஆனறெ
3 பில் கவுன்றமெ-
4 ண்டு துரையவர்-
5 கள் நல்லாமூர் முத்-
6 தால னாயக்கற் சவ-
7 பதாறருக்கு குடுத்த பற்று
8 மானாபடிக்கி மீ
9 நிலம் 50 சாலாபோகம்
10 நிலம் 20மா போக புத்
11 தேரி நிலம் 30 மா
12 யிலாசனாதர்
13 கோயிலுக்கு மே
14 ற்க்கே நிலம் 30

# 21. சிறுகளப்பூர் கல்வெட்டுகள்

**இல. தியாகராஜன் , அரியலூர்**

**21 : 1**

**இடம் :** *திருச்சி மாவட்டம், லால்குடி வட்டம், சிறுகளப்பூர் காளத்தீஸ்வரர் கோயில் அர்த்தமண்டப வடக்குச்சுவர்*

**காலம் :** *மூன்றாம் குலோத்துங்க சோழன், யா 19 , பொ.ஆ. 1197*

*செய்தி:* *கோயில் விமானம் செங்கற்களால் கட்டப்பெற்று சிதிலமடைந்து கிடந்தமை கண்டு ஜெயங்கொண்டச் சோழ வளநாட்டு திருவழுந்தூர் நெற்குன்றத்தைச் சார்ந்த ஆட்கொண்ட வில்லி பேராயிரமுடையான் திருஞானசம்பந்தன் என்பவர் இதை கருங்கல்லால் கற்றளியாகக் கட்ட, அப்பணியை முடியும் வரை இவ்வூரை விட்டுச் செல்லாமல் இருப்பதற்காகத் தன் கை கால்களில் சங்கிலியால் விலங்கு பூட்டிக்கொண்டு இடுப்பில் ஓலையால் ஆன ஒற்றை ஆடை கட்டிக்கொண்டு இலைக்கறி அல்லது கீரை மட்டும் உணவாக உட்கொண்டு கோயில் திருப்பணியை முடித்துள்ளார் இக்கோயிலைக் கருங்கல்லால் திருப்பணி செய்த திருஞானசம்பந்தனின் உருவம் கை கால்களில் விலங்குடனும் இடுப்பில் ஆடையுடனும் நின்ற கோலத்தில் அர்த்தமண்டபத் தெற்குச்சுவரில் அழகிய சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்
2 டு பத்தொன்பதாவது இன்னாயனார் கோயில் இட்-
3 டிகை நிமானமாய் அளம்பாஞ்சு அனுசுதமாய் எழு-
4 ந்தருளி இருக்கிறபடி கண்டு இங்கு நின்றும் போக-
5 ாதே இத்திருக்கோயில் திருக்கற்றளி சாத்த விர-
6 தங்கொண்டு விலங்குபூண்டு பறியுடுத்து
7 சாகந்தின்று இத்திருக்கற்றளி சாத்தினான் ஜய-
8 ங்கொண்ட சோழ வளநாட்டுத் திருவழுந்-
9 தூர் நாட்டு நெற்குன்றமுடையான் ஆட்கெ-
10 காண்ட வில்லி பேரராயிரமுடையானான
11 திருனானசம்பந்தன் இது ஸ்ரீமாஹேஸ்வர ரக்ஷை.

## 21 : 2

**இடம் :** *மேற்படிக் கோயில் அர்த்தமண்டபத் தெற்குச்சுவர் ஜகதிப்படை*

**காலம் :** *மூன்றாம் குலோத்துங்கன், யா 20, பொ.ஆ. 1198*

**செய்தி:** *இக்கோயிலின் ஜகதிப்படை என்ற கட்டிடப்பகுதியை சிறுவளைப்பூரில் காணியுடையவரும் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து காலியூர் கோட்டத்து கழும்பநூரைச் சேர்ந்தவருமான பெரியான் தேவன் ஆன ஆலால சுந்தரநம்பி என்பவர் கட்டியுள்ளார்.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு இருபதாவது இத்திருக்கற்றளி

2 சகதிப் படை செ[ய்]தான் சிறுவளைப்பூரில் காணியுடைய ஜெயங்கொண்ட சோ[ழம]

3 ண்டலத்துக் காலியூர்க் கோட்டத்துக் கழும்பநூருடையான் பெரியான் தேவனா[ன] ஆ

4 லால சுந்தரநம்பி நன்றாக.

## 21 : 3

**இடம் :** *மேற்படிக் கோயில் அர்த்தமண்டபத் தெற்குச்சுவர் முப்பட்டைக் குமுதப்பகுதி*

**காலம் :** *மூன்றாம் குலோத்துங்கன், யா 21, பொ.ஆ. 1199*

**செய்தி:** *இவ்வூரின் பெயர் சிறுவளைப்பூர் என்றும் கோயிலின் பெயர் திருப்பாதாளீசுவரமுடையார் கோயில் என்றும் குறிப்பிடப்படுகிறது இவ்வூர் வடகரை இராசராச வளநாட்டுக் கானற்க்கிளியூர் நாட்டின் கீழ் இருந்துள்ளது. கானற்க்கிளியூர் என்பது இன்று கானக்கிளிய நல்லூர் என்ற பெயருடன் விளங்குகிறது இக்கோயிலின் குமுதப்படை என்ற கட்டிடப் பகுதியைக் கட்டியவர் இவ்வூரைச் சேர்ந்த சோதிசூரியனான திருநீறுபரப்பினான் என்பவர் ஆவார்.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸிரி குலோத்துங்க சோழதேவற்கு யாண்டு இருபத்தொன்றாவது வடகரை யிராசராச வளநாட்டுக் கானற்கிளியூர் நாட்டுச்

2 சிறுவளைப்பூர் உடையார் திருப்பாதாளீசுவரமுடையார் கோயில் குமுதகப்படை செய்தான் சிறுவளைப்பூருடையான் சோதி சூரியனான திருநீறுப்பரப்பினான்.

## 21 : 4

**இடம் :** *மேற்படிக் கோயில் அர்த்தமண்டபத் தெற்குச்சுவர் கண்டப்பகுதி*

**காலம் :** *மூன்றாம் குலோத்துங்கன், யா 22, பொ.ஆ.1200*

**செய்தி :** *இக்கோயிலின் கண்டம், பட்டிகை ஆகிய கட்டடப்பகுதிகளை இவ்வூரைச் சேர்ந்த பெற்றான் நக்கன் ஆன பொற்கோயில் நம்பி என்பவர் கட்டியுள்ளார்.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க சோழதேவற்கு யாண்டு இருபத்திரண்டாவது சிறுவளைப்பூருடையார் திருப்பாதாளீஸ்வரமுடைய நாயனார் கோயி–

2 ற் திருக்கற்றளியில் கண்டமும் பட்டிகையும் இப்படை செய்தான் சிறுவளைப்பூருடையான் பெற்றான் நக்கனான பொற்கோயில் நம்பி

## 21 : 5

**இடம் :** *மேற்படிக் கோயில் அர்த்தமண்டபத் தெற்குச்சுவர் வேதிகைப்பகுதி*

**காலம் :** *மூன்றாம் குலோத்துங்கன், யா 24, பொ.ஆ.1202*

**செய்தி :** *இக்கோயிலின் வேதிகைப் படை என்ற கட்டடப்பகுதியை சிறுவளைப்பூரைச் சேர்ந்த ஆதித்தன் தேவனான இராஜராஜ இருங்கோளன் ஆன கானக்கிளியூர் நாட்டு மூவேந்த வேளான் என்பவர் கட்டியுள்ளார்*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ

2 குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு 24 இத்திருக்கற்றளி இவ்வேதிகைப்படை செ[ய்]தான் சிறுவளை–

3 ப்பூருடையான் [சேந்] தன் ஆதித்தன் தேவநான இராஜராஜ [இருங் கோளனான] கானக்கிளியூர் நாட்டு மூவேந்த வேளான்.

## 21 : 6

**இடம் :** *மேற்படிக் கோயில் கருவறை தெற்குச்சுவர்*

**காலம் :** *மூன்றாம் இராஜராஜன், யா 13, பொ.ஆ. 13*

செய்தி: *இக்கோயிலில் எழுந்தருளியுள்ள குன்றமெறிந்த பெருமாளுக்கு (முருகனுக்கு) பூஜை வழிபாட்டுக்கு இரண்டு மா நஞ்சை நிலமும், ஒரு வேலி புஞ்சை நிலமும் கொடுக்கப்பட்டுள்ளது.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திக–

2 ள் ஸ்ரீ ருரு தேவர்க்கு யாண்டு 13

3 வது சிறுவளைப்பூர் பிள்ளையார் குந்றெ–

4 மறிந்த பெருமாளுக்கு நஞ்செ நில[ம்] இரண்–

5 டுமாவும் புஞ்செ நில[ம்] ஒருவேலியும்.

# 61. சென்னை தங்கசாலை சிவசுப்ரமணியர் கோயில் கல்வெட்டு

கி. ஸ்ரீதரன், சென்னை

**இடம் :** *சென்னை மாவட்டம், சென்னை வட்டம், சென்னை சிவ சுப்ரமணிய சுவாமி திருக்கோயில் நுழைவு வாயில் அருகே தரையில் பதிக்கப்பட்டுள்ள கல்.*

**காலம் :** *பொ.ஆ.1912*

**செய்தி :** *இராகவபிரசாதலாலா என்பவரின் மனைவி தங்கசாலைத் தெருவில் அமைந்துள்ள சிவசுப்ரமணிய சுவாமி திருக் கோயிலுக்கு உச்சி காலக் கட்டளை வழிபாட்டிற்கும், தீப கைங்கரியத்திற்கும், கார்த்திகை சோம வார உற்சவம் நடைபெற வேண்டி தங்கசாலைத் தெருவில் உள்ள நிலமும், வீடும் தானமாக அளித்துள்ளார். தானம் அளிக்கப்பட்ட நிலம், விடு இவற்றின் சர்வே எண் மற்றும் நிலப்பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்த விபரங்களும் இக்கல்வெட்டில் குறிக்கப்படுள்ளன.*

*சிவமயம்*

1 சாலிவாகனரு 1 8 3 3– கலியுகாதி
2 4 0 1 2 இங்கிலிஷ் 1 9 1 2 ஜன–
3 வரி மீ 15 வக்கு விரோதி கிருது௵ தை
4 மீ௳ 2நி இராகவ பிரஸாத லாலா
5 மனைவி குப்பம்மாளின் சொந்த–
6 மாகிய சென்னபட்டணம் பெத்
7 தநாய்கன்பேட்டை சுப்பிரமணி–
8 ய முதலி வீதி. முனிசீபால். நெ 7 சர்–
9 ட்பிகேட் 3 3 9 பழயசர்வே
11 4 3 5 8 புதுசர்வே நெ. 7 3 8 1 மேற்படி
12 தங்கசாலை வீதி. 2 4 1 வதுநெ. இட–
13 த்தில் திருக்கோயில் கொண்டிரு–
14 க்கும் ஸ்ரீ சிவசுப்பிரமணிய ஸ்வா–
15 மி உச்சி கால கட்டளை கார்த்திகை
16 சோம வார உற்சவம் . தீபகைங்கரி–

17 யத்துக்கு. 1 8 9 2 நவம்பர் மீ

18 உ24 சவ என் தான பத்திரத்தினுல் தா–

19 னஞ் செய்து மதராஸ் ரிஜஸ்டர் ஆ–

20 பிசில் புத்தகம் வாலும் 1 8 8 0

21 பக்கம் 1 8 5 முதல் 1 8 7 நெ. 2 5 1 3

22 வருடம் 1 8 9 2 டிசம்பர் மீ3வ ரிஜஸ்ட–

23 ர் செய்திருக்கிறது. குப்பம்மாள்

# 62. கொடைக்கானல் கல்வெட்டு

மு. ராஜேஷ், புதுதில்லி

**இடம்:** கொடைக்கானலிருந்து 10 கி.மீ. தொலைவில் பேரிஜம் ஏரிச் சாலையில் வாயிலருகே 'மோயர் முனை' என்றழைக்கப்படும் தூணில் உள்ள கல்வெட்டு

**காலம்:** பொ.ஆ.1932

**செய்தி:** கல்வெட்டின் முற்பகுதி மேதகு தாமஸ் மோயரால் 1929ம் வருடம் ஜூன் 6ம் தேதி லூசி மற்றும் காலி லோகனின் உதவியுடன் (ஆளுநர் பெயர் கொண்ட) கோஸ்சன் சாலையில் முதற் பகுதி வெட்டப்பட்ட செய்தியினை கூறுகிறது. இரண்டாம் பகுதி மேற் சுட்டிய இடத்திலேயே 1932ம் வரும் பிப்ரவரி மாதம் 14ம் தேதி மேதகு ப்ரெட்ரிக் ஸ்டான்லியினால் இச்சாலை திறந்துவிடப் பட்ட செய்தியினை கூறுகிறது. இச்சாலை ஆங்கிலேயரால் இரண்டாம் உலகப் போரின் பொழுது ஜப்பானிய படையெடுப்பி லிருந்து தப்பிக்கும் பொருட்டு கொடைகானலிலிருந்து கேரள மாநிலம் கொச்சி செல்வதற்கு அமைக்கப்பட்டது.

1. The Goschen Road
2. Near this spot
3. The First sod of the Goschen Road was cut by



4. The Hon'ble Sir Thomas Moir, K.C.I.E.C.S.I.I.C.S.
5. With the Assistance of
6. The Misses Lucy & Molly Logan
7. On the 6th June 1929
8. At the same spot
9. The Road was Declared open by
10. His Excellency Lt.Col. The Right Honourable
11. Sir George Frederick Stanley
12. P.O.G.C.I.E.C.M.G.
13. Governor of Madras
14. On the 14th February 1932

# 63. சிலாயத்து முன்னீஸ்வரம் செப்புப் பொறிப்புகள்

சி. பத்மநாதன், கொழும்பு

63 : 1

இடம்: இலங்கை வடமேற்கு மாகாணம், புத்தளம் மாவட்டம், சிலாயம் என்ற ஊரில் உள்ள முன்னீஸ்வரம் கோயில் உள்ள இரதம்

காலம்: கலிவருடம் 5003 பொ.ஆ.1902

செய்தி: இருகாளைகள் கட்டி இழுக்கும் வகையில் மரத்தால் செய்யப்பட்ட இந்த இரதத்தின் கீழ்ப் பகுதி முழுதும் செப்புத் தகட்டால் போர்த்தப்பட்டுள்ளது. ஒரு செப்புத் தகட்டில் வாசகம் பொறிக்கப்பட்டு ஆணிகள் கொண்டு இரதத்தின் முன்பகுதியில் பொருத்தப்பட்டுள்ளது. இக்கோயில் அம்மன் வடிவம்பாளின் தீர்த்தத் திருவிழாவிற்காக நீர்க்கொழும்பை சேர்ந்த தங்கம்மா என்பவர் இரதத்தைக் கொடையாகக் கொடுத்த செய்தி சொல்லப்படுகிறது.

1 உ சிவமயம்

2 நிகழும் கலியாப்தம் 5003 ஆவணி மாதம் பூர்வப் பக்ஷம்

3 பௌர்ணமியில் ஸ்ரீ வடிவம்பாள் தீர்தோற்சவ உற்

4 சவத்திற்க்கு நீர்கொழும்பு இ. தங்கம்மாள் உபயம்

63 : 2

இடம்: இதே கோயிலில் உள்ள விளக்கொன்றின் பாதப்பகுதியில் வட்டமாக உள்ள பொறிப்பு.

காலம்: 6.9.1905

செய்தி: கொழும்பிலிருந்து முன்னீஸ்வரம் கோயிலுக்கு எடுத்துச் செல்லும் காவடிகள் வைத்து வழிபடுவதற்கு இவ்விளக்கினை கம்பெனித் தெருவைச் சேர்ந்த சேங்கியம்மாள் என்பவர் கொடுத்துள்ளார்.

1 உ முனியீசுவரம் கொழும்பார் காவடிக்கு கொம்பணித்தெரு சேங்கியம்மா உபையம்– 6–9–1905–

63 : 3

இடம்: இதே கோயிலில் உள்ள மற்றொரு விளக்கின் பாதப்பகுதியில் வட்டமாக இப்பொறிப்புள்ளது.

காலம்: பொ.ஆ.20ஆம் நூற்றாண்டுத் தொடக்கம்

செய்தி: கொழும்பிலிருந்து முனீச்சுவரம் போகிற காவடிகள் வழி பாட்டிற்காக ரெங்கத்தம்மாள் என்பவர் இவ்விளக் கினைக் கொடுத்துள்ளார்.



1 உ கொழும்பிலிருந்து முனீச்சுவரம் போகிற காவடிக்கு ரெங்கத்தம்மாளுபயம்

**63 : 4**

இடம்: இதே கோயிலில் உள்ள ஒன்பது திரிகள் இட்டு காட்டும் தீபத்தட்டு

காலம்: பொ.ஆ.1939

செய்தி: தீபத்தட்டின் பின்பக்கம் சூலம் பொறிக்கப்பட்டு மு.வ.1939 என்றுள்ளது.

மு=முன்னீஸ்வரத்தையும் வ = வடிவழகியம்மனையும் குறிப்பதாகக் கொண்டு இத்தட்டுவடிவழகி அம்மனுக்காகக் கொடுக்கப்பட்டது என்று கருதலாம்.

1 மு.வ.1937

**63 : 5**

இடம்: இதே கோயிலில் உள்ள ஊதுபத்திகள் வைக்கும் செம்பால் ஆன பீடம்

காலம்: பொ.ஆ. 4.9.1946

செய்தி: பொறிப்பு வளைவாக மேலும் கீழும் இரண்டு வரிகளாகவும் நடுவில் தேதிக் குறிப்புமாக உள்ளது. சுந்தரானந்தம் அருணாசலம் என்பவர் இதனை 4.9.1946 ல் செய்து கொடுத்துள்ளார்.

1 சுந்தராநந்தம்

2 அருணாசலம்

3 4–9–46



**63 : 6**

இடம்: இக்கோயிலில் உள்ள பாவைவிளக்கின் கீழ்ப்பகுதி

காலம்: இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கம்

செய்தி: மூன்றடுக்கு குமுத பீடத்தில் நின்றநிலையில் கையில் விளக்கும், தோளில் கிளியும் கொண்டு பின்புறம் ஜடை அமைப்பும் கொண்டு கனமாகச் செய்யப்பட்ட பாவை விளக்கின் கீழ்பகுதியில் வட்டமாக பொறிப்புள்ள முனீஸ்பரம் வடிவழகி அம்மனுக்காகப்

பாகனேரியைச் சேர்ந்த கிருஷ்ணபிள்ளை இதனைச் செய்து கொடுத்த செய்தி.

1 உ முனீஸ்பரம் வடிவளகி அம்மனுக்கு பாகநேரி நவ.அ.கிஷ்ட்டன பிள்ளை உபையம்

## 63 : 7



இடம்: இதே கோயிலில் உள்ள சூடம் ஏற்றிக் காட்டும் தீபத்தட்டில் வட்டமாக உள்ளது.

காலம்: பொ.ஆ. 20ஆம் நூற்றாண்டுத் தொடக்கம்

செய்தி: வடிவழகி அம்மனுக்கு உ.ஆத. என்ற சுருக்கப் பெயர் உள்ளவர். செய்து கொடுத்த செய்தி. இதனில் தமிழ் எண்ணில் உள்ள 20 என்ற குறிப்பு இதன் எடைக்குறிப்பாக இருக்கலாம்.

1 உ முநியீஷ்சுபரம் வடிவழகி அம்மாழுக்கு உ . ஆத . உபயம்

2 20

## 63 : 8

இடம்: இக்கோயிலில் உள்ள கனமான வட்டத் தாம்பூலத் தட்டில் உள்ளது

காலம்: பொ.ஆ.20ஆம் நூற்றாண்டுத் தொடக்கம்



செய்தி: வட்டமான தட்டின் நடுவில் பூ வேலைப் பாடு உள்ளது. அழகிற்காக வரையப்பட்ட இரு பெரிய வட்டங்களின் சுருக்கப் பெயரும் தட்டின் எடையும் குறிப்பாகப் பொறிக்கப்பட்டுள்ளன. ஆமா கிரந்த எழுத்தில் உள்ளது.

1 உ நா. ஆமா. 20

## 63 : 9

இடம்: இக்கோயிலில் உள்ள இலேசான வட்டத் தாம்பூலத்தட்டு

காலம்: பொ.ஆ.20ஆம் நூற்றாண்டு இடைப்பகுதி

செய்தி: பொறிப்பு புள்ளி புள்ளியாகக் கொட்டி பொறிக்கப்பட்டுள்ளது

1 முன்னீஸ்வரர் தேவஸ்தானம்

2 சிலாயம்

# 64. பவானி வட்டாரத் தொல்லியல்

செ. நந்தகுமார், சென்னை

ஈரோடு மாவட்டம் பவானி வட்டத்தில் புதிய கற்கால கருவிகள் மற்றும் இரும்புக் காலத்தைச் சேர்ந்த வாழ்விடப் பகுதிகள், இரும்புக்கால ஈமச்சின்னமாக கல்வட்டம் போன்றவை கண்டறியப்பட்டன. மேலும் வரலாற்றுக்கால வாழ்விடப் பகுதிகள் மற்றும் நடுகற்கள் போன்றவை கண்டறியப்பட்டுள்ளது. இப்பகுதியில் புதிய கற்காலம், இரும்புக் காலம், வரலாற்றுக் காலம் எனத் தொடர்ச்சியான பண்பாடுகள் இருந்துள்ளன என்பது தெரிய வருகிறது. இப்பண்பாடுகளின் கூறுகள் இங்கு பட்டியலிடப்பட்டுள்ளன.





| இடம் | காலம் | ஈமச்சின்னம் | கிடைத்த பொருட்கள் |
| --- | --- | --- | --- |
| எண்ணமங்கலம் | இரும்புக் காலம் | – | கருப்பு சிவப்பு |
| | | வரலாற்றுக் காலம் | பானை ஓடுகள் |
| | | மற்றும் நடுகல் | |
| கோவிலூர் | புதிய கற்காலம் | – | புதிய கற்கால கருவி |
| விராலிகாட்டூர் | இரும்புக் காலம் | கல்வட்டம் | கருப்பு சிவப்பு |
| | | | பானை ஓடுகள் |
| மாத்தூர் | புதிய கற்காலம் | – | புதிய கற்கால கருவி |
| | | வரலாற்றுக் காலம் | வரலாற்றுக் கால |
| | | | வாழ்விடப் பகுதி (சிவப்பு |
| | | | பானை ஓடுகள்) |
| கல்லாவரங்கோட்டை | இரும்புக்காலம் | கல்வட்டம் | கருசிப்பு சிவப்பு |
| | | | பானையோடுகள் |
| குறிச்சி | இரும்புக்காலம் | இரும்புக்கால | கருப்பு சிவப்பு |
| | | வரலாற்றுக் காலம் | வாழ்விடப் பகுதி |
| | | | ஓடுகள் மற்றும் நடுகல் |
| நத்தமேடு | இரும்புக் காலம் | இரும்புக் கால | கருப்பு சிவப்பு |
| | வாழ்விடப் பகுதி | பானையோடுகள் | |
| மணக்காட்டூர் | இரும்புக் காலம் | கற்பதுக்கை | மூடுகல் |
| சென்னாநாயக்கனூர் | புதிய கற்காலம் | – | புதிய கற்கால கருவி |
| மாரப்பம்பாளையம் | புதிய கற்காலம் | – | புதிய கற்கால கருவி |
| வரதநல்லூர் | வரலாற்றுக் காலம் | – | வரலாற்றுக்கால |
| | | | வாழ்விடப் பகுதி சிவப்பு |
| | | | பானையோடுகள் |

# 65. சங்கரன்மலைப்பட்டி தொல்லியல் ஆய்வுகள்

செ. கௌரிசங்கர், தஞ்சாவூர்

கரூர் மாவட்டம் கிருஷ்ணராயபுரம் வட்டத்தில் சங்கரன்மலைப் பட்டியில் தொல்லியல் எச்சங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. சங்கரன்மலைப் பட்டி கரூரிலிருந்து திருச்சி செல்லும் வழியில் சுமார் 25 கி.மீ. தொலைவில் உள்ள மலையின் மேற்பகுதியிலும் மலையின் அடிவாரப் பகுதியிலும் நுண்கற்காலத்தைச் சார்ந்த குவார்ட்ஸ், செர்ட்டி குவார்ட்ஸ் வகையைச் சார்ந்த செதில்கள் காணப்பட்டன.



இம்மலையின் கிழக்கு அடிவாரத்தில் பெருங்கற்கால ஈமச்சின்னமான குத்துக்கல் ஒன்றும் உள்ளது. மலையின் வடக்குப்புறச் சரிவையொட்டி உருண்டையான பாறைகளில் ஒரு பாறையின் கீழ் சமணப்படுக்கை உள்ளது. சமணப்படுக்கையின் கீழ் பகுதியில் தென்புற மூலையில் வரலாற்று ஆரம்பக் காலத்தைச் சார்ந்ததாகக் கருதப்படும் காளையின் கோட்டுருவம் பொறிக்கப் பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. காளைக்கு உரிய அம்சமான திமில் அழகாக பொறிக்கப்பட்டுள்ளது. மேலும் காளையின் முகம், கால்கள், வால் ஆகியவற்றுடன் நிற்கின்ற நிலையில் காட்சியளிக்கிறது. காளை கோட்டுருவத்திற்கு அருகில் 60 செ.மீ. இடைவெளியில் இரண்டு மனித உருவங்கள் கோட்டுருவங்களாகப் பொறிக்கப்பட்டுள்ளன. மேலும் ஒரு கோட்டுருவமும் அருகே காணப்படுகிறது. அவ்வுருவம் சிதைந்துள்ளதால் அவ்வுருவத்தை இனம் காண முடியவில்லை.





# 66. சேலம் மாவட்டத்தில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

இரா. ரமேஷ், காளையனூர்

சேலம் மாவட்டத்தில் கல்வராயன் மலைப்பகுதியில் புதிய கற்காலத்தைச் சார்ந்த கைக்கோடரிகளும், இரும்புக்கால பண்பாட்டு எச்சங்களும் கீழ்க்கண்ட இடங்களில் புதியதாகக் கண்டுபிடிக்கப்பட்டன. புதிய கற்காலக் கைக்கோடரிகள் சுமார் 5 செமீ. முதல் 15 செமீ. அளவுடையனவாகும். இவை இவ்வூர்களில் உள்ள பிள்ளையார் கோயில்களில் வைக்கப்பட்டு உள்ளூர் மக்களால் சாமிக்கல் என அழைக்கப்படுகின்றது.







| இடம் | காலம் | ஈமச்சின்னம் | கிடைத்த பொருட்கள் |
|---|---|---|---|
| கல்லூர் | புதிய கற்காலம் | – | கைக்கோடரிகள் |
| சேம்பூர் | – | – | கைக்கோடரிகள் |
| கோட்டைமேடு | இரும்புக்காலம் | முதுமக்கள் தாழி | கல்மணிகள் கண்ணாடி வளையல் துண்டுகள், வட்ட சில்லுகள், கருப்பு சிவப்பு, கருப்பு, சிவப்பு பானை ஓடுகள் |
| வெள்ளார் | இரும்புக்காலம் | முதுமக்கள் தாழி | சங்கு வளையல் துண்டுகள், கல்மணிகள், மண்விளக்கு, வட்ட சில்லுகள், கருப்பு சிவப்பு, கருப்பு, சிவப்பு பானை ஓடுகள் |
| மலைபெருமாள் கோயில் | இரும்புக்காலம் | கற்குவை | இரும்புக் கழிவுகள், கருப்பு சிவப்பு, கருப்பு, சிவப்பு பானை ஓடுகள் |
| மலங்காடு | இரும்புக்காலம் | கற்குவை | இரும்புக் கழிவுகள், கருப்பு சிவப்பு, கருப்பு, சிவப்பு பானை ஓடுகள் |
| அம்மன்நகர் | இரும்புக்காலம் | முதுமக்கள் தாழி | – |
| மூலக்காடு | இரும்புக்காலம் | கற்பதுக்கை கற்குவை, கற்திட்டைகள் | – |
| ஏரிக்காடு | இரும்புக்காலம் | கற்பதுக்கை கற்குவை, கற்திட்டைகள் | – |
| கோவில் மலை | இரும்புக்காலம் | கற்திட்டைகள் | |
| வெல்லக்கல்மலை | இரும்புக்காலம் | கற்திட்டைகள் | |
| புலிக்கல் | இரும்புக்காலம் | கற்திட்டைகள் | |





# 67. சீர்காழி வட்டாரத்தில் புதிய கற்காலக் கருவிகள்

**இரா.செந்தில் தஞ்சாவூர்**

நாகப்பட்டினம் மாவட்டம், சீர்காழி வட்டத்தில் உள்ள கன்னியாகுடி கிராமத்தில் கள ஆய்வுகள் மேற்கொண்டபொழுது பெருங்கற்காலத்தைச் சார்ந்த வாழ்விடப் பகுதிகளும் கருப்பு, சிவப்பு நிறப் பானை ஓடுகளும், கருப்பு நிறப் பானை ஓடுகளும், சிவப்பு நிறப் பானை ஓடுகளும், சாம்பல் நிறப் பானை ஓடுகளும் இடைக்காலத்தைச் சார்ந்த வாழ்விடப் பகுதிகளும், புதைப்படிவ சிறு துண்டு ஒன்றும்; முன்னர் கண்டறியப்பட்டது. இப்பகுதியினை மேலும் ஆய்வுகள் செய்த வீ செல்வகுமார் (ஆவணம் இதழ் 2010) இப்பகுதியில் நுண்கற்காலத்தை சார்ந்த செதில்கள் காணப்படுவதாகக் குறிப்பிட்டுள்ளார் இப்பகுதியை கட்டுரை ஆசிரியர் தொடர்ந்து ஆய்வு செய்த பொழுது புதிய கற்காலத்தைச் சார்ந்த கைக்கோடரிகளை கண்டுபிடித்தார். சீர்காழியிலிருந்து மயிலாடுதுறை செல்லும் சாலையில் சுமார் 8 கிமீ தொலைவில் வைத்தீஸ்வரன்கோயிலுக்குத் தெற்கே மணல்மேடு செல்லும் சாலையிலுள்ள திருப்பன்கூரிலிருந்து தெற்கே 3 கிமீ. தொலைவில் கன்னியாகுடி என்ற ஊர் உள்ளது. ஊரின் தென்கிழக்கே திடல் என்று அழைக்கப்படும் இடத்தில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வில் மேற்பரப்பில் இரண்டு கற்கோடரிகள் கண்டறியப்பட்டது. ஒன்று முழுமையாகவும், மற்றொன்று உடைந்த நிலையிலும் உள்ளது இவ்விடத்திற்கு வடக்கே சுமார் 100 மீட்டர் தொலைவில் உடைந்த மற்றொரு புதிய கற்காலக் கைக்கோடரி கிடைத்தது இவற்றுடன் இரும்புக்காலப் பண்பாட்டுத் தடயங்களும் இங்கு காணப்படுகின்றது இப்பகுதியில் உள்ள அம்மணி, க/பெ ராஜாராமன் என்பவரின் வீட்டில் ஆழ்குழாயக் கிணறு தோண்டும் பொழுதும் கைக்கோடரி கிடைத்ததைக் கூறினர்.

முழுமையாகக் கிடைத்த கைக்கோடரி 5.4 செ.மீ ,நீளமும் 4.2. செ.மீ., அகலமும் 2.9 செ.மீ , கனமும்இ; 94 கிராம் எடையையும் கொண்டுள்ளது. முழுமையாகக் கிடைத்த மற்றொரு கருவியின் நீளம் 12.4 செ.மீ., அகலம் 6 செ.மீ. கனம் 3 செ.மீ , அளவுகளையும் 368 கிராம் எடையையும் கொண்டுள்ளது பிற இரண்டு கருவிகளும் உடைந்த நிலையில் உள்ளன.

# 68. பெரியபட்டினத்தில் சோழர் காசுகள்

ப. சண்முகம், சென்னை

இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் பாண்டியர்களது துறைமுகமாகச் சிறப்புற்று விளங்கிய பெரியபட்டினத்தில் (இராமநாதபுரம் மாவட்டம்) கண்டெடுக்கப்பட்ட சங்ககாலக் காசுகளைப் பற்றி முன்னொரு இதழில் விவரிக்கப்பட்டுள்ளது. இங்கே காணப்பட்ட பிற்காலப் பாண்டியர் காசுகளைப் பற்றிய விவரங்களும் வேறொரு இதழில் வெளியிடப்பட்டுள்ளன. இவை தவிர பேரரசுச் சோழர், மதுரை சுல்தானியர், பாமனி சுல்தானியர் ஆகியோர் வெளியிட்ட காசுகளும் கள ஆய்வில் கண்டெடுக்கப் பட்டுள்ளன பேரரசுச் சோழர்களால் வெளியிடப்பட்ட முப்பத்தி எட்டு காசுகள் பற்றிய விவரங்கள் இக்கட்டுரையில் தரப்பட்டுள்ளன.

இக்காசுகள் யாவும் வட்டவடிவிலான செப்புக் காசுகள் இக்காசுகளைக் கண்டெடுத்தபோது மணல், மண் ஆகியவற்றோடு காணப்பட்டது. சில காலம் இவற்றைச் சுத்தம் செய்யாமல் வைத்திருக்க நேரிட்டது; பின்னர் இக்காசுகளில் உள்ள மண், மணல் ஆகியவை அகற்றப்பட்டது பல காசுகள் நல்ல முறையில் பாதுகாக்கப்பட்டுள்ளதால் காசுகளில் உள்ள உருவங்களும் எழுத்துகளும் தெளிவாகத் தெரிகின்றன உப்பு நீர், மண் ஆகியவற்றில் பல காலம் இருந்துள்ளதால் சில காசுகளில் சிற்சில இடங்களில் அரிப்பு ஏற்பட்டு உருவங்கள் மறைந்து போயுள்ளன பல காசுகள் வேதியியல் மாற்றங்களுக் குட்பட்டு பச்சை வண்ணப் பூச்சுடனும் காணப்படுகின்றன இன்னும் சில காசுகள் அதிக காலம் புழக்கத்தில் இருந்துள்ளதால் தேய்ந்துபோய் வழுவழுப்பான பக்கங்களைக் கொண்டுள்ளன. இன்னும் சில காசுகள் விளிம்பில் உடைபட்டுள்ளதால் ஓரத்தில் உள்ள உருவங்கள் மறைந்து போயுள்ளன

பொதுவான வடிவமைப்பிலும் எடை அளவிலும் இக்காசுகள் சற்று மாறுபட்டு உள்ளன வட்டவடிவக் காசுகளாக இவை தென்பட்டாலும் பல காசுகள் ஒழுங்கற்ற வட்டம், நீள்வட்டம் போன்று உள்ளன இக்குறைபாடு காசுகள் அச்சிடும்போதே ஏற்பட்டவையாகக் கருதலாம் இக்காசுகள் 21-16 மி.மீ. விட்டமுடையனவாகவும், 175 - 300 மி.மீ தடிமனுடையனவாக உள்ளன. இவற்றின் எடையளவு 3-4 கிராம் வரை உள்ளன

இக்காசுகளில் சில மாறுதல்கள் உள்ளபோதும் யாவற்றையும் ஒரே வகையான காசுகளாகக் கருதலாம் இக்காசுகளில் "ஸ்ரீ ராஜராஜ" என்று சோழ அரசரின் பெயர் உள்ளதால் இப்பெயர் உள்ள காசுகள் யாவற்றையும் இராசராசனே வெளியிட்டதாகக் கருதுவதற்கு வாய்ப்புள்ள போதும், முதலாம் இராசராசனுக்குப்பின் வந்த சோழ அரசர்களும் இவ்வகைக் காசுகளை வெளியிட்டிருக்கலாம். இவை யாவற்றிலும் ஒரே மாதிரி




உருவங்கள் இருந்தபோதும் ஒரே அச்சில் செய்யப்படவில்லை. ஒரே உருவமாக உள்ள போதும் அதன் வடிவத்தில் மாறுதல்கள் உள்ளன. இக்காசுகளை உருவாக்குவதற்கு பல அச்சுக்களைப் பயன்படுத்தி உள்ளனர்.

இக்காசுகளில் உள்ள உருவங்களைப் பற்றி இதுவரை சரியாக யாரும் விவரிக்கவில்லை. பொதுவாக இக்காசில் முன்பக்கத்தில் உள்ள உருவத்தை "இலங்கை மனிதன்" (Ceylon man) என்றும் பின்பக்கத்தில் அமர்ந்த நிலையில் உள்ள ஆள் எனவும் குறிப்பிடுவர். முழுமையாக உள்ள காசுகளை ஆய்ந்து இக்காசுகளில் உள்ள உருவங்கயையும் எழுத்துக்களையும் கீழ்க்கண்டவாறு விவரிக்கலாம்:

முன்பக்கத்தில் நின்றவாறு ஒரு ஆள் தனது நீட்டிய வலது கையில் நீண்ட கத்தி ஒன்றையும் மடக்கிய இடது கையில் பழம் அல்லது பூ ஒன்றைத் தன் முகத்தருகே வைத்துள்ளார் இவர் அணிந்துள்ள நீண்டு தரை வரை தொங்கும் கீழாடையின் மடிப்பும் நன்கு வடிவமைக்கப்பட்டுள்ளது மேலும் இவ் ஆள் தன் தலையில் மகுடம் அணிந்துள்ளவாறு காட்டப்பட்டுள்ளது காசின் இடது பக்கத்தில் (உருவத்தின் வலது பக்கத்தில்) மூன்று திரிகள் கொண்டதாக இரண்டு அடுக்குள்ள நீண்ட தண்டுடைய குத்துவிளக்கு ஒன்று உள்ளது காசின் வலதுபக்கத்தில் ஐந்து வட்டவடிவமான பொருள்கள் உள்ளன இவ்வட்டங்களின் மேல்புறத்தில் சந்திரப் பிறை ஒன்று உள்ளது இவ்வனைத்து உருவங்களைச் சுற்றி சிறு புள்ளிகளான வட்டம் காணப்படுகிறது

பின்பக்கத்தில் கால்களை விரித்து அமர்ந்த நிலையில் ஓராள் உருவம் உள்ளது. இவ் உருவத்தின் வலது கை நீண்டும் இடக்கை வளைந்தும் உள்ளது வளைந்த இடது கையில் பழம் அல்லது பூ ஒன்றைத் தன் முகத்தருவே வைத்துள்ளது இவ்வாள் தன் தலையில் பக்கவாட்டாக மகுடம் அணிந் துள்ளவாறு காட்டப்பட்டுள்ளது காசின் வலப்புறத்தில் ஆள் உருவத்தை ஒட்டியே மூன்று வரிகளில் தேவநாகரி எழுத்து வடிவிலும் வடமொழியிலும் (1) ஸ்ரீ (2) ராஜ (3) ராஜ என்ற வாசகம் உள்ளது இவ்வனைத்து உருவங்களைச் சுற்றி சிறு புள்ளிகளான வட்டம் சில காசுகளில் காணப்படுகிறது

காசில் காணப்படும் இரண்டு உருவங்களும் தன் தலையில் மகுடம் அணிந்துள்ளவாறு காட்டப்பட்டுள்ளது இம்மகுடம் சில காசுகளில் தெளிவாகத் தெரியவில்லை மேலும் சில காசுகளில் அப்பகுதி வெட்டுப் பட்டிருக்கும் மகுடங்கள் அணிந்திருப்பதிலிருந்து இவ் உருவங்களை அரசர் உருவங்களாகக் கருதலாம்

1. ப. சண்முகம், 'பெரியபட்டினத்தில் சங்ககாலக் காசுகள்', *ஆவணம் 20,* பக். 105–107
2. P. Shankugam 'Later Pandya Coins from Periyapattinam', *Studies in South Indian Coins,* Vol, 22, pp. 82-97

# அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

# 69. தமிழகத் திருக்கோயில் விமானங்கள் (ஓர் வரலாற்றுப் பார்வை)

**கி. ஸ்ரீதரன், சென்னை**

*தமிழகத் திருக்கோயில் அமைப்பில் இறைவன் எழுந்தருளியிருக்கும் இடம் 'கருவறை' எனப்படுகிறது இதன்மீது கலையழகு மிக்க கட்டட அமைப்பு காணப்படுகிறது இதனை 'விமானம்' என அழைக்கிறோம். சிற்ப நூல்கள் கருவறை முழுவதையுமே 'ஸ்ரீவிமானம்' எனக் குறிப்பிடுகின்றன.*

*கருவறையில் உள்ள சிவலிங்கத்தை 'சூட்சும லிங்கம்' எனவும், ஸ்ரீவிமானத்தை 'ஸ்தூலலிங்கம்' எனவும் குறிப்பிடுகின்றனர் தொலை விலிருந்தே ஸ்ரீவிமானத்தை அன்பர்கள் வழிபட அவை உயரமாக அமைக்கப்பட்டன எனலாம்.*

*'மானம்' என்றால் அளவு. 'விமானம்' என்றால் மேலான அளவு என்பது பொருள் ஞானிகள் தங்களுடைய அனுபவங்களால் அறியப்பட்ட அளவுகளைக் கொண்டு மக்களுக்கு நன்மை பயக்கும் வகையில் இறைவழிபாட்டிற்கென அமைக்கப்பட்ட கட்டடங்களே விமானங்கள் என அழைக்கப்படுகின்றன.*

*பண்டைய நாளில் திருக்கோயில்கள் பல்வேறு அமைப்புகளில் கட்டப்பட்டன திருக்கோயில்களுக்கு பெரும் தொண்டு செய்த திருநாவுக்கரசர் பெருமான் திருக்கோயில்களின் பல்வேறு அமைப்புகளை தமது திருப்பதிகப் பாடல் ஒன்றில் குறிப்பிடுகிறார்.*

பெருக்காறு சடைக் கணிந்த பெருமாள் சேரும்
        பெருங்கோயில எழுபதினோடு டெட்டும் மற்றும்
கரக்கோயில் கடிபொழிறசூழ் ஞாழற்கோயில்
        கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
        இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழந்து
        தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீருமன்றே

- அப்பர்

---

**கோவிலூர் ஆதீனத் தலைவர் தவத்திரு நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள் கோவிலூர் ஆண்டவர் பெயரில் ஏற்படுத்தியுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 11வது சொற்பொழிவு. நாள் : 23.07.2011**

ஸ்ரீவிமானங்கள் கல்வெட்டுகளில் மூலஸ்தானங்கள் எனக் குறிக்கப் பட்டுள்ளன இதனை ஒட்டி கருவறையில் எழுந்தருளியுள்ள இறைவனை ஸ்ரீமூலஸ்தானத்து பரமசுவாமி என்றெல்லாம் அழைக்கப்படுவதைக் காணலாம்

திருக்கோயில்களைக் கட்டுவதற்கு மனைநூல்கள் உள்ளன இதனை 'வாஸ்து சாஸ்திரம்' என அழைப்பர் மயமதம் என்ற சிற்ப நூல் கட்டடத்திற்கு ஆதாரப் பகுதிகளாக (1) அதிட்டானம் (பீடம்), (2) சுவர் - பித்தி (கால்), (3) பிரஸ்தரம் (துரை), (4) கழுத்த (கிரீவம்), (5) சிகரம் (தலை), (6) ஸ்தூபி (குடம்) இவை அமைந்துள்ளன எனக் குறிப்பிடுகிறது. இவ்வங்கங்களோடு இரண்டு தளங்களையும் சேர்த்து 'அஷ்டாங்க விமானம்' எனப்படும் விமான அமைப்புகள் தமிழகத்தில் காணப்படுகின்றன.

திருக்கோயில் விமானத்தை ஐந்து வகையாகப் பிரிக்கலாம் எனச் சிற்ப நூல்கள் குறிப்பிடுகின்றன அவையாவன : (1) சாந்திகம் (அமைதியானது), (2) பௌட்டிகளம் பருமனை அளிக்கக் கூடியது (3) ஜயதம் (வெற்றியை அளிப்பது), (4) அத்புதம் (அற்புதத்தைக் கொடுக்கக் கூடியது), (5) சாவகாமிதம் (எல்லோராலும் விரும்பக்கூடியது) (காசியபம் - பக்கம் 283)

விமான அமைப்பில் பல்வகை பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன மயமதம் கூறும் பெயர்கள் (1) போகம், (2) பத்ரம், (3) விசாலம், (4) சுவஸ்திகம், (5) கரம், (6) கண்டம், (7) தூங்கானை விமானம் (8) ஸ்கந்த, (9) விருத்தம், (10) கல்யாணசுந்தரர், (11) கோசல விமானம், (12) பத்யபத்ர, (13) சுத்த விமானம்

வைணவத் திருக்கோயில்களில் கோயிலின் சிறப்புகள் பற்றி குறிப்பிடும் பொழுது ஸ்ரீவிமானத்தின் பெயர், திருமேனியின் கோலம், முகமண்டலம், தாயார் பெயர், ஆழ்வார்கள் பாடிய (மங்களாசாசனம்) குறிப்புகள் என்பதைக் கூறுவார்கள் ஸ்ரீரங்கம் பிராணவாகார விமானம், மதுரை அழகர் கோயில் - சோமசந்த விமானம், திருநாங்கூர் - நந்தியாவர்த்தன விமானம் போன்றவை. திருவெள்ளறை கோயிலில் கருவறைக்குச் செல்ல இரண்டு வழிகள் - தட்சிணாயத்தில் ஒரு வாசல் உத்தராயணத்தில் ஒரு வாசல் திறக்கப்படுகிறது விமானத்தின் சிகரம் மூன்று வகையான அமைப்பில் அமைந்துள்ளன சதுர வடிவமாக அமைந்துள்ளதை 'நாகரம்' என்றும், வட்ட வடிவமாக அமைந்துள்ளதை 'வேசரம்' எனவும், எட்டு பட்டையாகக் காட்சி அளிப்பதை 'திராவிடம்' எனவும் குறிப்பிடுகின்றனர்

விமானம் என்பது உபானம் முதல் ஸ்தூபி வரை என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன கல் அல்லது செங்கல்லால் முழுமையாகக் கட்டப்பட்டால் 'புருஷஹர்மியம்' என்றும், இரண்டும் சேர்த்து கட்டப்பட்டால் 'ஸ்திரிஹர்மியம்' என்றும் அழைக்கப்படுகிறது.

கருவறையில் (பிரஸ்தரம்) கூரைக்கு மேல் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நிலைகள் - தளங்கள் அமைக்கப்படுவதுண்டு ஒரு நிலைக்

கோயிலை 'சிறு கோயில்' என்பர். முற்காலச் சோழர் காலத்தில் ஏனாதி, காளியாப்பட்டி, பனங்குடி, கண்ணனூர் ஆகிய ஊர்களில் அமைந்துள்ள கோயில்கள் ஏக தள விமான கற்றளிகளாகும். சிதம்பரம் அருகே உள்ள எறும்பூர் கடம்பவனேசுவரர் கோயில் கல்வெட்டில் அக்கோயில் 'சிறுதிருக்கோயில்' என்றே குறிக்கப்படுகிறது

கொடும்பாளூர், திருச்செந்துறை, கீழையூர், திருக்கட்டளை ஆகிய ஊர்களில் உள்ள கோயில்கள் இரண்டு நிலைக் கற்றளி விமானத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக திகழ்கின்றன தஞ்சாவூர், கங்கை கொண்ட சோழபுரம், தாராசுரம், திரிபுவனம் ஆகிய கோயில்களின் விமானங்கள் பல தளங்களை உடையதாக விளங்குகின்றன இவ்வாறு விமானத் தளங்கள் இரண்டு நிலை, மூன்று நிலை என அதிகரித்துச் செல்லும் கோயிலை 'மகாப்பிராசாதம்' என்பர்

பல்லவ மன்னர்கள் தொடக்க காலத்தில் குடைவரைக் கோயிலை அமைத்தார்கள். மாமல்லபுரத்தில் ஒற்றைக் கல் கோயில்கள் (Monolithic Temples) வலையன் குட்டை ரதம் போன்றவைகளில் விமானத்துடன் கோயில்கள் அமைந்துள்ளதைக் காணலாம் ஐந்து ரதங்கள் எனப்படும் கோயில்களில் ஒவ்வொரு கோயிலும் ஒவ்வொருவிதமான அமைப்புடன் காணப்படுவது சிறப்பாகும். அர்ச்சுன தவம் எனப்படும் பாறைச் சிற்பத் தொகுதியில் விமானத்துடன் அமைந்துள்ள சிறிய கோயிலைக் காணலாம்

இராஜசிம்மன் கால படைப்புகளான காஞ்சி கைலாசநாதர் கோயில், பனைமலை தாளகிரீசுவரர் கோயில்களின் கருவறை விமான அமைப்பு சற்று மாறுபட்டு அமைந்துள்ளது கருவறையைச் சுற்றி சிற்றாலயங்கள் இணைந்து காணப்படுகின்றன கைலாசநாதர் கோயிலில் இறைவன் எழுந்தருளியுள்ள கருவறையைச் சுற்றிலும் சிறுபாதை அமைந்துள்ளது இத்தகைய அமைப்பினை 'சாந்தார விமானம்' என அழைப்பர் இதுபோன்ற கட்டட அமைப்பினை நார்த்தாமலை விஜயாலய சோழீச்சுரம், தஞ்சைப் பெரிய கோயில், கங்கை கொண்ட சோழபுரம் கோயில்களில் காணலாம் நார்த்தாமலை கோயிலில் கருவறை உட்பக்கம் வட்ட வடிவமாகவும் வெளிப்புறம் சதுரமாகவும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது திருவதிகை கோயிலிலும் அடித்தளம் கல்லாலும் மேற்பகுதி சுதை வடிவங்களும் காணப்படுகின்றது. கருவறையைச் சுற்றி அங்க ஆலயங்கள் அமைந்துள்ளன இவை பல்லவர்கால பணியாக இருப்பினும் 13ஆம் நூற்றாண்டில் திருப்பணி செய்யப்பட்டதாகும் விமானம் 'வான் கயிலாயம்' எனப்படுகிறது கலியாண்டு 4414 வீரட்டானமுடைய நாயனார் கோயில் வான்கயிலாயம் திருமலை ஸ்தூபி - பரியந்தமாகத் திருமஞ்சனம் பண்ணி அகச்சாரணை திருக்கல்லும் சாத்தி அருளினார் கேரள அரசன் ரவி கேரளனான பெருமாள் குலசேகரன் இவரே திருப்பணி செய்தார் என அறிகிறோம்.

கருவறையில் ஒன்றுக்கு மேற்பட்ட தளங்கள் அமைந்துள்ள விமானத்தை 'அஷ்டாங்க விமானம்' என அழைப்பர் இதுபோன்ற அமைப்பினை காஞ்சிபுரத்தில் வைகுந்த பெருமாள் கோயில், மதுரை கூடல் அழகர் கோயில், திருக்கோஷ்டியூர் சௌமிய நாராயணப் பெருமாள் கோயில், உத்திரமேரூர் சுந்தரவரதராஜப் பெருமாள் கோயில், எண்ணாயிரம் போன்ற கோயில்களில் திருமாலின் கிடந்த, அமர்ந்த, நின்ற கோலங்களைக் கருவறையில் காணலாம்

உத்திரமேரூர் சுந்தரவதப்பெருமாள் கோயில் பல்லவ மன்னன் நந்திவர்மன் காலத்தில் கட்டப்பட்டதாகும். ஸ்ரீவேலி விஷ்ணுக்கிரகம் எனப்படுகிறது. காஞ்சிபுரத்தைச் சேர்ந்த பரமேசுவரன் என்ற ஸ்தபதி இக்கோயிலைக் கட்டினான் வாஸ்துகளில் சூரியன் போல விளங்குகிறது எவன் ஒருவன் இக்கோயில் அலங்காரங்களையும் அணிகளையும் நுணுக்கங்களையும் அறிகிறானோ அவனே வாஸ்து வித்தையில் சிறந்தவன் என ஒரு கல்வெட்டு கூறுகிறது இராஜேந்திர சோழன் காலத்தில் இராஜேந்திர சோழ விண்ணகரம் எனப்பட்டது ஒன்றன் மேல் ஒன்றாக மூன்று கருவறைகள் உள்ளன கீழ்தளத்தில் நான்கு இடையில் நான்கு, மேலே ஒன்று ஆக திருமாலின் 9 வடிவங்களை இங்கே காணலாம். மரிசி சம்ஹிதை முறையில் வழிபாடு நடைபெறுகிறது.

சோழர் காலத்தில் கோயிற் கட்டடக் கலை மிக உயர்ந்த நிலையில் இருந்தது. செங்கற்களால் கட்டப்பட்ட கோயில்கள் 'கற்றளிகளாக' மாற்றப்பட்டன

கோயில் விமான அமைப்பில் தூங்கானை வடிவக் கோயில்கள் ஒரு சிறப்பிடம் பெறுகின்றன. யானையின் பின்புறம் போன்று அரைவட்ட வடிவில் கருவறை அமைக்கப்பட்டிருக்கும் இதனை ஹஸ்தி பிருஷ்டக் கோயில்கள் என அழைப்பர். பல்லவர்கள் காலத்தில் இவ்வமைப்பு துவங்கியது. தொண்டை நாட்டில் பல திருக்கோயில்களின் கருவறை அமைப்பு கஜபிருஷ்ட அமைப்பில் அமைந்துள்ளது சோழ நாட்டிலும் பெண்ணாகடம், திருமியச்சூர் போன்ற கோயில் விமானங்கள் மேற்கண்ட அமைப்பிலேயே அமைந்துள்ளது பெண்ணாகடம் கோயில் தூங்கானை மாடமுடைய நாயனார் எனக் கல்வெட்டுகளிலும் தூங்கானை மாடச்சுடர் கொழுந்தே என அப்பர் பெருமானும், தூங்கானை மாடம் தொழுமின்களே என சம்பந்தரும் போற்றி வழிபடுகின்றனர் திருவொற்றியூர் கோயிலில் இராஜேந்திர சோழன் காலத்தில் வீரசோழ தச்சன் என்ற சிற்பியால் கருமை நிறக் கல்லால் மூன்று தளம் உடையதாகக் கட்டப்பட்டது அலங்கார வேலைப்பாடுகள் - தோரணம் - கூடம், சிம்ம முகம், மகரம் போன்றவை கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறது.

பிற்காலச் சோழர் காலத்தில் கருவறை விமானம் தேர் வடிவத்தில் அமைந்துள்ளதை மேலக்கடம்பூர் அமிர்தகடேசுவரர் கோயிலில்

காணலாம் இதனை 'கரக்கோயில்' என அப்பர் பெருமான் குறிப்பிடுகின்றார். இதுபோன்ற அமைப்பினை குடந்தை சாரங்கபாணி திருக்கோயிலிலும் காணலாம்

தமிழகத் திருக்கோயில்களில் சீர்காழி, தலைஞாயிறு (கருப்பறியலூர்) கோயில் விமானங்கள் மாறுபட்ட அமைப்பு உடையதாக விளங்குகிறது. தலைஞாயிறு கோயில் கொகுடிக் கோயில் எனக் குறிப்பிடப்படுகிறது. சட்டநாதர் வழிபாடு விமானத்தில் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதேபோன்று குடந்தை நாகேசுவர சுவாமி கோயில், பண்ருட்டி அருகே திருத்துறையூர் கோயிலில் விமானத்தில் உள்ள இறைவனுக்கு வழிபாடுகள் நடைபெற்றதை அறிய முடிகிறது.

இதேபோன்ற அமைப்பு உடையது திருவீழிமிழலை திருக்கோயில் விமானம் ஆகும் இதனை 'விண்ணிழி விமானம்' எனத் திருமுறைகள் போற்றுகின்றன. ஞானசம்பந்தர் பெருமானுக்கு சீர்காழி இறைவன் இவ்விமானத்தில் தோணியப்பராகக் காட்சி அளித்த சிறப்புப் பெற்றது இக்கோயில் விமானம் பொன் ஓடுகளால் வேயப்பட்டிருந்தது என்பதை கல்வெட்டுச் சான்றுகளால் அறியமுடிகிறது. முதலாம் இராஜாதிராஜனின் அனுக்கியரான பல்லவன் பட்டாலி நங்கை என்பவன் 70,769 செப்பாணிகள் கொண்டு பொன்வேயப்பட்டிருந்து எனக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. மேலும் இவ்விமானம் 'விண்ணிழிபொற்கோயில்' எனக் குறிப்பிடப் படுகிறது விமானத்தில் நான்கு நாசிகளுக்கும் மூன்று நாசிகூடத்திற்கும் சிகரத்திற்கும் பொன் வேய்ந்துள்ளார்கள். விண்ணிழி விமான பொற்கோயில் திருப்பள்ளித் தாமப்பிச்சன், விண்ணிழி விமான பொற்கோயில் திருமிழலைத் தேவன் என்ற சிறப்புப் பெயருடன் தன்னை அழைத்துக் கொண்டிருக் கிறார்கள்

தமிழகத்தில் பல திருக்கோயில்கள் விமானம் பொன்மயமாகத் திகழ்ந்ததை அறிய முடிகிறது சிதம்பரம், திருவரங்கம், மதுரை அழகர்கோயில், தஞ்சை பெரிய கோயில், காஞ்சி வரதர் கோயில் போன்றவை பொன்வேயப் பட்டிருந்ததை கல்வெட்டுகளினால் அறிய முடிகிறது

மதுரை, காஞ்சி காமாட்சி அம்மன், பழனி முருகன் கோயில் போன்றவை பொன் தகடுகள் வேயப்பட்டு விமானங்கள் காட்சி அளிக்கின்றன. வேலூர் அருகே அண்மையில் கட்டப்பட்ட 'ஸ்ரீபுரம் பொற்கோயில்' இதற்கு சான்றாக விளங்குகிறது

சப்த மாதாக்கள் மற்றும் தேவியருக்காக கட்டப்பட்ட கோயில்களின் விமானங்கள் சாலை வடிவ அமைப்பு உடையதாக விளங்குகிறது இதற்கு 'சாலஹார விமானம்' என்று பெயர். காஞ்சிபுரத்தில் ஏகாம்பரேசுவரர் கோயில் அருகே ஜுரஹரேசுவரர் கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் கருவறை நீள்வட்ட வடிவில் அமைந்திருக்கும். இதனை 'கல்யாண சுந்தர

*விமானம்' எனக் கூறுவர். நடராஜர் சன்னதிக்கு மேலே உள்ளது சபாஹார விமானம் ஆகும்.*

*மதுரை மீனாட்சி கோயிலில் சுந்தரேசுவரர் எழுந்தருளியுள்ள கருவறை அமைப்பு தனிச்சிறப்புடையது கருவறையின் வெளிப்புறச் சுவரில் கம்பீரமான யானைச் சிற்பங்களைக் காணலாம் எட்டு திசைகளிலும் எட்டு யானைகள் தாங்கி நிற்கின்றன இதற்கு 'இந்திர விமானம்' என்று பெயர். இந்திரனால் அமைக்கப்பட்டதால் இந்திர விமானம் என அழைக்கப்படுகிறது. இவ்விமானத்தைப் பற்றி திருவிளையாடற் புராணத்தில் குறிப்பிடப்படுகிறது.*

*வைணவ வரலாற்றில் திருக்கோஷ்டியூர் கோயில் விமானம் சிறப்பிடம் பெறுகிறது (வைணவ சம்பிரதாயத்தில் பெருமாள் எழுந்தருளியுள்ள விமானங்களை சிறப்புப் பெயருடன் அழைப்பார் திருநாங்கூர் கோயிலில் நந்தியாவர்த்தன விமானம் என்றும், மதுரை - அழகர் கோயில் விமானம் சோமாசந்த விமானம் என்ற சிறப்புப் பெயருடன் அழைக்கப்படுகின்றன.)*

*பிற்காலத்தில் விமானத்தின் மேற்பகுதி செங்கல் சுதையால் கட்டப்பட்டன அதிக சுதை உருவங்கள் அமைக்கப்பட்டன. விமானத்தின் உயரம் குறைந்து, கோபுரங்களின் உயரம் அதிகமானது.*

*திருக்கோயில் விமானங்களின் தோற்றம், வளர்ச்சி, மாற்றங்கள், தமிழ்த் திருக்கோயில் கட்டடக்கலை வரலாற்றில் ஒரு சிறப்பிடம் பெற்று விளங்குகிறது*

## ஆய்வுக்கு உதவிய நூல்கள்


1. *மயமதம், காச்ய சிலப் சாத்திரம்* – தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலைய வெளியீடு
2. *மரபுக் கட்டடக் கலை*, கோ. திருஞானம்
3. *தமிழர் நாகரிகம்*, தொகுப்பாசிரியர் நடனகாசிநாதன் (*கோயிலும் குடியிருப்பும்*, கி. ஸ்ரீதரன், வே. இராமன் ஸ்தபதி) தொல்லியல் துறை வெளியீடு, 1994

# 70. சித்திரமேழி – பெரியநாட்டார் கல்வெட்டுகள்

**சொ. சாந்தலிங்கம், மதுரை**

'சித்திரமேழி பெரியநாடு' என்னும் ஓர் அமைப்பு வேளாண் மக்களின் கூட்டமைப்பு. பொ.ஆ. 11ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் உருவான இவ்வமைப்பு பற்றிப் பல முன்னோடி ஆய்வுகள் இதுவரை வெளிவந்துள்ளன. இருப்பினும் இதுகாறும் கிடைத்துள்ள செய்திகளை முழுமைப்படுத்திக் காணும் முயற்சியாகவே இக்கட்டுரை அமைந்துள்ளது

தமிழக ஊரக நிருவாக அமைப்புகளாக ஊர், நாடு, நகரம், பிரமதேயம் எனப் பல அமைப்புகள் செயல்பட்டுள்ளன இவற்றுள் ஊர், நாடு ஆகியவை வேளாண் மக்கள் சார்ந்த அமைப்புகளாகவும், அவற்றின் நிர்வாகிகள் ஊரார், நாட்டார் என்ற பெயர்களிலும் அறியப்படுகின்றனர். நகரம் என்பது வணிகர்களின் அமைப்பாக இயங்கியுள்ளது பிரமதேயம் என்பது பிராமணர்களின் வாழ்விடங்களைக் குறித்தது. இச்சொல்லுக்கு இணையாகச் சதுர்வேதிமங்கலம், அகரம் போன்ற பிற சொற்களும் ஆளப்பட்டுள்ளன இவ்வூர்களை நிர்வாகம் செய்த அமைப்புகள், சபை, குறி, பெருங்குறி, மகாசபை எனப் பல பெயர்களில் குறிக்கப்பட்டுள்ளன. இப்பகுப்புகள் எதிலும் இல்லாத புதியதான ஓர் அமைப்பாகச் 'சித்திரமேழி பெரியநாடு' எனும் அமைப்பு காணப்படுகிறது. இதன் தனித்தன்மை என்ன? இவ்வமைப்பு தோன்றுவதற்கான அகப், புறக் காரணங்கள் யாவை? இவ்வமைப்பின் வளர்ச்சியும், வீச்சும் எத்தகையது என்பதையெல்லாம் அறிவது சமூகவியல் ஆய்வுக்கு அவசியமானதாகிறது

'சித்திரமேழி' என்றால் அழகிய கலப்பை எனப் பொருள்படுகிறது கலப்பையை அடையாளமாகக் கொண்ட வேளாண் மக்களின் அமைப்பு என்பதையும், இது நாடு என்னும் குற்றெல்லையைக் கடந்து பரந்துபட்ட அளவில் ஒன்றுக்கு மேற்பட்ட நாடுகளை உள்ளடக்கியதாக இருந்தது என்பதையும் பெரிய நாடு எனும் சொல் விளக்குகிறது இவ்வமைப்பினைப் பற்றி முதன்முதலாக ஆய்வு செய்து தன் கருத்தை வெளியிட்டவர் தம் கட்டுரையில் இவ்வமைப்பை 'இந்தியாவின் மாநில அளவிலான பேரமைப்பு' (Largest Provincial Organisation of India) என அறிமுகம் செய்தார்.[1] இதனையே பர்டன் ஸ்டெயின் அவர்கள் உள்நாட்டுப் பெருமன்றம் (Supra Local Asseembly) எனப் பெயரிட்டு அழைக்கிறார்[2]

'சித்திரமேழி பெரியநாடு' என்னும் வேளாளர் அமைப்பு தோன்றுவதற்கு முன்பாக வேளாளர்களின் அமைப்பு ஓரிரு கல்வெட்டுகளில் காணப்படு

---

பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவியுள்ள தி.நா. சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு எண் 12, நாள் 23.07.2011

கின்றன கி.பி. 1010ல் மகாபலிபுரத்தில் 'பேரிளமையார்' என்னும் ஒரு குழுவினர், வணிக நகரத்தாருடன் இணைந்து பணியாற்றியுள்ளனர்[3] புதிதாக நூறு வீட்டுமனைகளைப் பிரித்து நான்கு கூறுகளாக்கி உரியவர்களுக்கு வழங்க மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளில் பேரிளமையாரும், வணிக நகரத்தாரும், கோட்டம் வகை செய்கின்ற அதிகாரியும் இணைந்து செயல்பட்டுள்ளனர் இப்பேரிளமையார் என்பார் வேளாண் பெருமக்களே என்பதைத் திருக்கடவூர்க் கல்வெட்டுகளைக் கொண்டு விளக்குவார் எ. சுப்பராயலு அவர்கள்.[4] ஆனால் பர்டன் ஸ்டெயின் அவர்கள் இப்பேரிளமையாரைக் (Middle aged women attached to the temples) கோயிலோடு இணைந்த பேரிளம் பெண்கள் எனத் தவறாகப் பொருள் கொண்டுள்ளமை இங்கு நோக்கத்தக்கது[5] எனவே பெரியநாட்டார் என்னும் அமைப்புக்கு முன்னோடி அமைப்பாக பேரிளமையார் என்னும் அமைப்பை நாம் கருதலாம் கி.பி. 12ம் நூற்றாண்டில் மன்னார்குடியில் ஐந்து பேரிளமை நாட்டார் அமைப்புகளைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன.[6] ஆனால் இவை ராஜராஜச்சதுர்வேதிமங்கலம் என்னும் அமைப்புக்குள் செயல்பட்ட பேரிளமை நாட்டார் என அறியப்படுகின்றனர் இவர்கள் காணியாளர்களாக (அ) நிலவுடைமையாளர்களாக இல்லை மாறாக உழுகுடிகளாகவே கருதக்கூடிய நிலையில் உள்ளனர் எனவே இவர்களைப் பெரிய நாட்டார் அமைப்போடு ஒப்பிடுவது பொருத்தமற்றதாகும்

'சித்திரமேழி பெரியநாட்டார்' அமைப்பின் தோற்றத்திற்கான காரணம் பற்றி நொபொரு கரசிமா அவர்கள் தனது நியாயமான ஐயத்தை வெளிப்படுத்தியுள்ளார் 1984ல் தான் வெளியிட்ட கட்டுரை ஒன்றில் 'சோழர் ஆட்சியின் இரண்டாம் பிற்பகுதியில் இவ்வமைப்புத் தோற்றம் பெறுகிறது இது எதனால் ஏற்பட்டது? இதன் விளைவுகள் என்ன? என்ற கேள்விகளை எழுப்பியதோடு, சோழராட்சியின் முற்பகுதியில் அபரிமிதமாக வளர்ந்த பிரமதேயங்களின் எழுச்சியோடு இதனை ஒப்பிட்டுப் பார்க்க முடியுமா? என்று வினவுகிறார்[7] அவருடைய ஊகம் மிகச் சரியானதே என்பதைப் பலவித சான்றுகளைக் கொண்டு நிறுவலாம் அபரிமிதமான பிரமதேயங்களின் வளர்ச்சியும் ஒரு முக்கிய காரணம் என்பதை ஏற்றுக் கொள்ளும் அதேவேளையில் வேறு சில உள்ளூர் நிலவரங்களும் காரணமாக இருக்கலாம் என்பதையும் மறுப்பதற்கில்லை எடுத்துக்காட்டாக முதன்முதலாகச் சித்திரமேழி பெரியநாட்டார் அமைப்பு குறித்து கல்வெட்டு சுட்டும் தாமரைப்பாக்கம் என்னும் ஊரின் அரசியல், சமூகச் சூழல் இங்கு ஆய்வு செய்து உண்மைகளை அறியலாம் முதன்முதலாக பொ.ஆ 1057ல் இரண்டாம் இராஜேந்திர சோழன் ஆட்சிக் காலத்தில் தாமரைப்பாக்கத்தில் பெரியநாட்டார் கூட்டம் கூடியதாகக் கல்வெட்டு கூறுகிறது.[8] இக்கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவு வருமாறு: பங்கள நாட்டில் அரசின் நிலவரி ஆவணங்களில் தேவதான நிலங்களாக விடப்பட்ட நிலங்களுக்கு அரசு அதிகாரிகள் விளைப்பாட்ட பாட்டம் என்ற புதிய

வரிகளை விதித்தனர். தேவதான நிலங்களைத் தங்கள் ஜன்மக்காணி, திருமுக்காணி என்று திரித்தும் கூறினர் இதனால் வேளாண்மை செய்வார்க்குப் பல துன்பங்கள் நேரிட்டன கோயில் நிவந்தங்கள் நிறைவேறாமல் தடைப்பட்டன. இத்தகைய சூழலில் பெரியநாட்டார் சபை ஊர்க்கோவில் முன்பாகக் கூடியது. இக்கூட்டத்தில் இராஜராஜப் பிடரான் என்னும் அரசு அதிகாரியும் கலந்து கொண்டார். இவ்அதிகாரியால் கூடுதல் வரிகளுக்கான தடை விதிக்கப்பட்டது. பெரியநாட்டாரும் தடையை ஏற்று முன்னிருந்தபடியே செயல்பட்டனர் என்று அறிகிறோம்.

இதே ஆண்டில் (1057ல்) பெரியநாட்டார் உள்ளூரில் நிகழ்ந்த ஒரு பூசலில் ஏற்பட்ட உயிரிழப்புக்கு, சமூக நீதியின் அடிப்படையில் வழங்கிய தீர்ப்பு ஒன்றும் கல்வெட்டாக வெட்டப்பட்டுள்ளது.[9] இக்கல்வெட்டில் நாம் கூர்ந்து கவனிக்கத்தக்க செய்தியும் ஒன்று உள்ளது. சித்திரமேழியார் தங்களுக்கென ஓர் அமைப்பைக் கண்டதோடு அல்லாமல் தங்களது தனித்துவத்தை நிலைநிறுத்தும் வகையில் ஒரு மெய்க்கீர்த்தியையும் உருவாக்கிக் கொண்டனர் என்பதே அது.

‘ஸ்ரீமத் பூதேவி புத்ராநாம் சாதுர்வண்ண
ஸநோத்பவ ஸர்வலோ ஹிதார்த்தாய
சித்ரமேளஸ்ய ஸாஸனம்
ஸ்ரீபூமி தேவிக்கு மக்களாகி
அறம்வளர புகழ்க்கலி மெலிய
செங்கோலே தெய்வமாகவும் திசை அனைத்துஞ்
செவிடுபடாமை சித்திரமேழி தம்மம்
இனிது நடாத்துகின்ற ஸ்ரீ ராஜேந்திர
சித்திரமேழிப் பெருக்காளரோம்’

என்று தங்களை அரசனது பெயரோடு இணைத்துக் கூறிக் கொண்டனர். தங்களைப் பூமிதேவியின் மக்கள் என்றும் நான்கு வர்ணங்களிலிருந்தும் வந்தவர்கள் என்றும் அடையாளப்படுத்திக் கொண்டனர் இச்சபையார் அடுத்த ஐந்து ஆண்டுகளில் (கி.பி. 1062ல்) தங்களது பணி எல்லையை விரிவுபடுத்திக் கொண்டனர் என்பதை அறிகிறோம். கி.பி. 1062ல் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துப் பல்குன்றக் கோட்டத்தார், வெண்குன்றக் கோட்டத்தார், ஒய்மாநாட்டார், பனையூர்நாட்டார், திருமுனைப்பாடி நாட்டார், மிலாடான ஜனநாதவள நாட்டார், குடலடைப்பாடி நாட்டார், பங்கள நாட்டார், உத்தம சோழ வளநாட்டார், வாணகப்பாடி நாட்டார் எனப் பத்து நாட்டார்கள் என்று கூடி ஒரு தீர்மானம் (கைச்செலவோலை) நிறைவேற்றினர். அதன்படி தங்கள் வேளாண் நிலங்களில் நீர்நிலத்திற்கு 50 கல நெல்லும், கார்விளைந்த நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு 40 கலமும் புஞ்சைக்கு வேலி ஒன்றுக்கு மூன்று காசு இருப்பதாகவும் முடிவு செய்து அரசு அதிகாரிகளுக்குத் தெரிவித்தமை.

இவ்வாறு தாங்கள் செலுத்த வேண்டிய வரிகளைத் தாங்களே நிர்ணயம் செய்து கொள்ளும் அளவில் ஐந்து ஆண்டுகளில் இவ்வமைப்பு வலுப் பெற்றுள்ளமையைக் காண்கிறோம்

இத்தகைய எழுச்சிக்கான இவ்வூருக்கே உரிய காரணத்தையும் இங்குள்ள கல்வெட்டு ஒன்று தருகிறது.[10] அதாவது இவ்வமைப்பு உருவாவதற்குப் பத்து ஆண்டுகளுக்கு முன்பாக (பொ.ஆ. 1047ல்) இவ்வூரில் அதிகமான வரிக் கொடுமையால் மக்கள் அவதியுற்றுள்ளனர். இவ்வூரில் முதலாம் இராசேந்திரன் காலத்தில் 31வது ஆட்சியாண்டில் (பொ.ஆ 1043ல்) அரச பரிவாரத்தினர் குடிமக்களை வரித்து அடிமைக்காசு வசூலித்தனர் குடிமக்கள் இதனால் ஊரைக் காலி செய்து போயினர். பின் ஊருக்கே வந்து கோயிலில் 30 காசுகள் கடன் பெற்று அரசுக்குச் செலுத்தினர் கோயிலில் வாங்கிய காசுக்கு வட்டி கூடச் செலுத்த இயலாத நிலையில் 1047ல் 3000 குழிநிலத்தை விற்றுக் கடனைச் செலுத்தினர். இவ்வாறான அடக்குமுறைச் சூழல் இவ்வூரில் மிகுந்த காரணத்தாலேயே இவ்வூரில் முதன்முதலாக மக்களிடையே எழுச்சி ஏற்பட்டது அதன் விளைவாகவே 'சித்திரமேழி பெரியநாடு' என்னும் அமைப்பு இவ்வூரில் ஏற்பட்டது என்றால் அது மிகையாகாது

## பிரமதேயங்களின் வளர்ச்சி

பிரமதேயங்களின் அபரிமிதமான வளர்ச்சியின் எதிர்விளைவாக வேளாண் மக்களின் எழுச்சியின் வடிவமாக சித்திரமேழி பெரியநாட்டார் அமைப்பு தோன்றியிருக்க கூடுமா? என்ற ஓர் ஐயத்தை நொபொரு கரசிமா அவர்கள் வெளியிட்டிருந்ததை முன்னரே கண்டோம் அக்கருத்தின் வன்மை மென்மைகளை உரிய சான்றாவணங்களுடன் நாம் கருதிப் பார்க்கலாம்.

தமிழகத்தில் பிராமணர்களின் வருகை, அவர்களின் ஆதிக்கம், அரசர்கள் அவர்களுக்கு வழங்கிய நிலக்கொடைகள் பற்றிய செய்திகள் பல சங்க இலக்கியங்களிலேயே பேசப்படுகின்றன (புறம் 122, 362) அவர்களுக்கு வழங்கப்பட்ட நிலக்கொடை பிரமதாயம் என அக்காலத்திலேயே பெயர் வழங்கப்பட்டுள்ளது 'உம்பற்காட்டு ஐநூறு ஊர் பிரமதாயம் கொடுத்து' எனச் சங்க இலக்கியமாக பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தின் அடிக்குறிப்பில் காணப்படுகிறது. பூலாங்குறிச்சி கோச்சேந்தன் கூற்றன் கல்வெட்டுதான் (பொ.ஆ 500) பிரமதாயம் பற்றிக் குறிப்பிடும் முதல் கல்வெட்டாகத் தமிழகத்தில் அறியப்பட்டுள்ளது

பல்லவர்களின் தமிழக வருகையைத் தொடர்ந்தே பிரமதேயங்களின் வளர்ச்சி அதிகரித்தது. இவர்கள் காலத்தில் ஆந்திரத்தின் குண்டூர்ப் பகுதியிலிருந்து பெரும் எண்ணிக்கையான பிராமணர்கள் குடிபெயர்ந்து தொண்டை நாட்டுப் பகுதியில் குடியேறினர் இதற்கான அரச ஆதரவும் அவர்களுக்குத் தடையின்றி கிடைத்தது[11] இப்பிராமணர்கள் கோயிற்

பணிகளிலேயே அதிகம் ஈடுபடுத்தப்பட்டனர். பல்லவர் ஆட்சியில் புதிது புதிதாக எழுந்த கற்கோயில்களுக்குப் பிராமணர்களின் பணிகளும் தேவைப்பட்டது இவர்களுக்கு வருவாய் ஆதாரங்களும் உறுதி செய்யப்பட்டன வளமான நிலங்களும், உரிய நீர்ப்பாசன வசதிகளும், அவற்றுக்கான வரி விலக்குகளும் வழங்கப்பட்டன வேதக்கல்வி கற்பிக்க வேத விருத்தி என்றும், பாரதம் வாசிக்க பாரத விருத்தி என்றும் பல பெயர்களில் பிராமணர்களுக்கு நிலங்கள் வழங்கப்பட்டன. பிரமதேய நிலங்களுக்கு நாட்டாட்சி, ஊராட்சி முதலான எவ்வித வரிகளிலிருந்தும் விலக்கு அளிக்கப்பட்டது அரசோடு நேரடித் தொடர்பை பிரமதேயங்கள் கொண்டிருந்தன. அவர்களது நீர்ப்பாசனக் கால்வாய்களில் 'அந்நியர் குறங்கறுத்துவிடவும் கூடை நீர் இறைக்கவும் குற்றேத்தம் எடுக்கவும்' தடை விதிக்கப்பட்டிருந்தது பிரமதேய ஊர்களில் பிராமணர்கள் சுட்டோடால் மாளிகை கட்டலாம். நிலங்களில் தமனகம், செங்கழு நீர், உள்ளி ஆகியவைகள் நடலாம். தென்னை பயிர் செய்யலாம் கிணறு தோண்டலாம் செக்கு இட்டுக் கொள்ளலாம். அவர்கள் அனுமதியின்றி அவர்கள் மனையில் தெங்கும் பனையும் ஈழவர் ஏறக் கூடாது என்பது போன்ற பலவித சிறப்புரிமைகள் பிராமணர்க்கு வழங்கப்பட்டன.

பிராமணர்களுக்கு வழங்கப்பட்ட பிரமதேய நிலங்களைப் பாதுகாப்பதற்கும் பலவிதமான நுட்பமான காரணங்கள் கற்பிக்கப்பட்டன 'பிராமணன் சொத்து கொடிய விஷம் மற்ற விஷத்தை விஷம் என்று சொல்ல முடியாது விஷம் ஒருவனையே கொல்லும். பிராமணன் சொத்து பிள்ளை, பெயரன் தலைமுறைகளைக் கொல்லும் என்ற அச்சுறுத்தும்விதமான ஓம்படைக்கிளவிகள் ஆவணங்களில் எழுதப்பட்டன கல்விக்கூடங்களும் பிராமணர் வசமே இருந்தன வேதக் கல்வியே அவர்களுக்கு வழங்கப்பட்டது இத்தகைய பல சிறப்பு உரிமைகளைக் கொண்ட பிரமதேயங்கள் (சதுர்வேதிமங்கலங்கள்) தமிழகமெங்கும் பல்கிப் பெருகின. பாண்டிய நாட்டுப் பகுதிகளில் 205 பிரமதேயங்களும், சோழ மண்டலத்தில் 145ம், தொண்டை மண்டலத்தில் 165ம் ஆக பிரமதேயங்கள் கி.பி 8ம் நூற்றாண்டு முதல் 13ம் நூற்றாண்டு வரையில் உருவாக்கப்பட்டுள்ளன[13]

'பிரமதேயக் கிராமங்கள் ஈடும் எடுப்பும் அற்ற நாகரிகத் தளங்களாக அமைந்து தம்மைச் சுற்றியிருந்த வேளாண் குடிமக்களின் பண்பாட்டையும் வளப்படுத்தி வேளாண் தொழிலையும் மேம்படுத்தின மடங்களும், கல்வி நிலையங்களும் இப்பிரமதேயக் கிராமங்களில் ஏற்படுத்தப்பட்டன. இவற்றின்மூலம் கல்வியும், கோயில்சார் வேத ஆகமக் கல்லூரியும் உள்ளூர் மற்றும் வெளியூர் மக்களுக்கும் வழங்கப்பட்டன எனவே பிரமதேயங்கள் குறிப்பிடத்தக்க நிறுவனங்களாகச் செயல்பட்டன" என்பார் பர்டன் ஸ்டெயின்.[14]

## தனியூர்கள்

பிரமதேயங்களுக்குள் சில குறிப்பிட்ட ஊர்கள் தன் கூறு என்றும் தனியூர் என்றும் அழைக்கப்பட்டமைக்குப் பல கல்வெட்டுகள் சான்றுகளாக உள்ளன 'தன்கூறு' என்னும் தகுதியைப் பெற்ற முதல் சதுர்வேதிமங்கலம் உத்திரமேரூராகும் கம்பவர்மனின் 6ஆம் ஆட்சியாண்டிலேயே (கிபி 874) இவ்வூர் 'தன்கூறு' என்னும் தகுதியைப் பெற்றிருந்தது.[15] பிரமதேயமே நாட்டார்களின் நிர்வாகத்திற்கு அடங்காத தனித்துவமான அமைப்பாகும் வரிவிலக்குப் பெற்ற அரசோடு நேரடித் தொடர்பு கொண்ட நிறுவனம் 'தன்கூறு' என்னும் சொல் பிரமதேயத்திற்கு மேலும் ஒரு தனித்துவமான சிறப்புத் தகுதியைச் சுட்டி நின்றது தன்கூறு என்பது 'கூற்றம்' என்பதன் சுருங்கிய வடிவமே. தன்கூறு என்பதே பின்னர் தனியூர் என மாற்றம் பெற்றுள்ளது. உத்திரமேரூர் முதலாம் குலோத்துங்கன் காலத்தில் (கிபி 1091ல்) தனியூர் இராசேந்திர சோழச் சதுர்வேதிமங்கலம் எனப் பெயர் பெற்றிருந்தது[16] தனியூர் என இவ்வூர் சுட்டப்படும்போது மாற்றுப் பெயராகக் கூட அதன் முன்னைப் பெயர் குறிப்பிடப்படுவதில்லை எடுத்துக் காட்டாக, தனியூர் இராசேந்திரச் சோழ சதுர்வேதிமங்கலம் என்னும் பெயரில் உத்திரமேரூர் இடம் பெறவே இல்லை. மேலும் தனியூர் என அழைக்கப்படும்போது அது அரசனின் பெயரைத் தாங்கிய ஊராக மாற்றம் பெற்று விடுகிறது காவதிப்பாக்கமாகிய விக்கிரம சோழ சதுர்வேதி மங்கலம், உக்கலாகிய ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதிமங்கலம், மதுராந்தகச் சதுர்வேதி மங்கலம், ராஜமல்லச் சதுர்வேதிமங்கலம் (பிரம்மதேசம்), மணிமங்கலமாக லோகமாதேவிச் சதுர்வேதிமங்கலம், திரையனேரியான உத்தம சோழச் சதுர்வேதிமங்கலம் எனப் பல எடுத்துக்காட்டுகளைக் கூறலாம் இப்படிப்பட்ட தனியூர்கள் தொண்டை மண்டலத்தில் 20ம் ,சோழ மண்டலத்தில் 13ம், பாண்டிய மண்டலத்தில் இரண்டும் கணக்கிடப் பட்டுள்ளன.[17] (பட்டியல் பின் இணைப்பில் தரப்பட்டுள்ளது)

தன்கூறு (அ) தனியூர் என்பது தனித்து இயங்கக்கூடிய நாடு என்னும் பரப்பளவில் அமைந்த பேரூர் அல்லது நகரம் இது மத்திய கால இங்கிலாந்தில் வழங்கிய பரோ (Borough) என்னும் நகரங்களுக்கு (எடு. எடின்பர்க், பிட்ஸ்பர்க்) இணையானது என்பார் கே.ஏ நீலகண்ட சாஸ்திரியார்[18] 'நாட்டுப் பிரிவுகளோடு எவ்விதத் தொடர்பும் இல்லாமல் நாடு போன்ற தனித்துவமான ஒரு கூறு என்று கொண்டு, இவ்வகைத் தனியூர்கள் நாட்டின் அதிகார வரம்பைத் தாண்டிச் செயல்பட்டன என்கிறார் எ. சுப்பராயலு.[19] தனியூர் எனப்பட்ட பிரமதேயங்களும், நகரங்களும் ஒருவித சுயாட்சி பெற்ற அமைப்புகளாகச் செயல்பட்டதாகக் கூறுகிறார் மற்றொரு ஆய்வாளர்.[20]

தனியூர் பற்றிய அறிஞர் சண்பகலட்சுமியின் கருத்து இங்கு நோக்கத்தக்கது

'தனியூர் என்னும் அமைப்பு சோழர் காலத்தில் அரசு உருவாக்கத் தின்போது திட்டமிட்டு மேற்கொள்ளப்பட்ட ஒரு கொள்கைரீதியான மாற்று அமைப்பாகும் இதன் விளைவாக பிரமதேயங்களுக்கு உள்ளாகவே தரம் பிரிக்கப்படும் நிலையும், நகரமயமாக்கும் முயற்சியும் அறிமுகமானது பிரமதேயம், தேவதானம் ஆகியவற்றிற்கு மேலானதாகத் தனியூர் கருதப்படும். அவை சமூக, அரசியல், பொருளியல் நிர்வாகத்தின் மேலாண்மை கொண்டதாக வேறுபடுத்திக் காட்டப்பட்டன. அரச குடும்பத்தினரும் அலுவலர்களும் தனிக் கவனமும் நேரடியான தொடர்புகளும் கொண்டிருந்தனர் அநேக தனியூர்களில் உள்ள கோயில்கள் அரசர்களாலேயே உருவாக்கப்பட்டவையாகவும், ஊர்களின் பெயர்கள் அரசர்களின் சிறப்புப் பெயர்களைக் கொண்டும் அமைந்துள்ளன. அரச ஆணைகளை விளம்பரப்படுத்தும் ஊடகங்களாகவும் தனியூர்கள் செயல்பட்டன.[21] இத்தகைய தனியூர்கள் சுயமாகவே வரி விதிக்கும் அதிகாரமும் பெற்று அசரனோடு நேரடித் தொடர்பு கொண்டதாகவும் திகழ்ந்தன' என்பார் அவர்[22]

இவ்வாறான தனித்துவமான பிரமதேயங்களின் வளர்ச்சி, அரசு நிர்வாகத்தில் நாட்டார்களின் செல்வாக்கைக் குறைக்கும் ஒரு முயற்சியாக அரசாலேயே ஊக்குவிக்கப்பட்டிருக்கலாம். பல்லவர் காலத்தில் தொடங்கப்பட்ட இம்முயற்சி சோழர் காலத்தில் முழுமை அடைந்தது பல்லவர் காலம் வரை சுமுகமாகச் செயல்பட்டு வந்த ஒருசேரப் பயன்களைப் பெற்ற பிரமதேயங்களும், நாடுகளும், கி.பி. 12ஆம் நூற்றாண்டுக்குப்பின் ஏற்பட்ட சில அகப்புற சக்திகளின் நெருக்கடிகளினால் இவற்றின் உறவுகளில் பின்னடைவு ஏற்பட்டது என்பார் பர்டன் ஸ்டெயின்.[23] ஆனால் ஸ்டெயின் குறிப்பிடும் 12ம் நூற்றாண்டுக்கு முன்பாகவே அதாவது கி.பி 11ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேயே இரு கூறுகளுக்கும் இடையே முரண்பாடுகளும் உரசல்களும் தோன்றிவிட்டன எனலாம். இதனைச் சரியாக உணர்ந்து தன் கருத்தை யூகமாக முன்வைத்துள்ளார் நொபொரு கரசிமா அவரது கருத்துப்படி, 'பிரமதேயங்களின் சோழ அதிகாரக் கட்டமைப்பின் மையமாக இருந்து சுற்றியிருந்த வெள்ளான் வகை ஊர்களை ஒருங்கிணைக்கவும், அதிகாரம் செலுத்தவும் தலைப்பட்டன. இதன் விளைவாக சில எதிர் நடவடிக்கைகள் எழுந்தன. இதுவே வேளாண் மக்களின் அமைப்புரீதியான எழுச்சியாக மாறியது பெரியநாட்டார் என்னும் நாட்டார் குழுக்கள் தோன்றுவதற்கு இத்தகைய பிரமதேயங்களின் மிகையான வளர்ச்சியே காரணமாக இருக்கலாம்.[24]

இத்தகைய காரணங்களால் வேளாளர் எழுச்சி ஏற்பட்டு ஓர் அமைப்பை உருவாக்குவதற்கு அப்போது வளர்ச்சி பெற்றிருந்த வணிகக் குழுக்களே முன்னோடியாகத் திகழ்ந்து செல்வாக்கு செலுத்தியது என்பார் கரசிமா.[25]

பத்தாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் தமிழகத்தில் உருவான வணிகக் குழுக்களின் (கமுதி, கி.பி 1000) தாக்கத்தின் பயனாக அதுபோன்ற ஓர் அமைப்பை வேளாண் மக்கள் உருவாக்கினர் என்பது அவரது கருத்தாகும் முதலில் சித்திரமேழி அமைப்பில் செயல்பட்டவர்கள் முழுமையும் வேளாளர்களே. நான்கு வர்ணத்திலிருந்தும் வந்தவர்கள் என்று அவர்கள் தங்களைக் கூறிக் கொண்டாலும் வேளாண் தொழில் செய்தவர்களே இதில் முதலில் இணைந்து செயல்பட்டனர்.

## பெரியநாட்டாரில் செயல்பாடுகள்

தமிழகத்தில் சித்திரமேழி பெரியநாட்டார் அமைப்பு 22 ஊர்களில் சிறப்பாகச் செயல்பட்டுள்ளன (பட்டியல் இணைக்கப்பட்டுள்ளது). கி.பி. 11ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்து 13ஆம் நூற்றாண்டின் இறுதிவரை இக்குழுவினர் சிறப்பாகச் செயல்பட்டுள்ளனர் 18ஆம் நூற்றாண்டு வரையிலும் கூட சித்திரமேழியார் எனத் தங்களை வேளாளர்கள் அழைத்துக் கொள்ளும் வழக்கம் கொங்கு நாட்டிலிருந்துள்ளது.[26]

கி பி 1057ல் தொடங்கிய இவ்வமைப்பு கி.பி 12ஆம் நூற்றாண்டில் நெல்லூர், தும்கூர் ஆகிய இரண்டு ஊர்களிலேயே தோற்றம் பெற்றது. கி.பி. 13ஆம் நூற்றாண்டில்தான் சுமார் 21 ஊர்களில் செயல்பட்டுள்ளது முதலில் வேளாளர்களின் அமைப்பாக மட்டும் தொடங்கிய இது 12, 13ஆம் நூற்றாண்டுகளில் ஐநூற்றுவர் என்னும் வணிகக் குழுவோடு இணைந்தும், 13ஆம் நூற்றாண்டு வாக்கில் கலனையார் என்னும் பல் தொழில் குழுக்களோடு சேர்ந்தும் பெயரளவில் செயல்பட்டுள்ளது இவற்றின் செயல்பாடுகளையும், இதன் தாக்கத்தினால் ஏற்பட்ட பன்னாட்டார் அமைப்பு, வலங்கை, இடங்கை பிரிவினைகள், நத்தமான், சுருதிமான், மலைமக்கள் என்னும் புதிய குழுக்களின் எழுச்சியையும் கி.பி 13ஆம் நூற்றாண்டளவில் காணலாம். இவற்றைப் பற்றிய விரிவான ஆய்வை கரசிமா அவர்கள் மேற்கொண்டு விளக்கியுள்ளார்.[27] சில குறிப்பிட்ட இடங்களில் சித்திரமேழி அமைப்பு செயல்பட்ட விதம் பற்றி மட்டும் நாம் காணலாம்

எடுத்துக்காட்டாக திருக்கோயிலிலூரில் செயல்பட்ட சித்திரமேழி அமைப்பினர் தங்களுக்கென ஒரு விரிவான மெய்க்கீர்த்தியை உருவாக்கியுள்ளனர். அதுமட்டுமின்றி அவர்கள் கூடிய வைணவக் கோயிலுக்கு 'சித்திரமேழி விண்ணகர்' என்றே பெயர் வழங்கப்பட்டுள்ளது.[28] பூமிதேவியின் மக்கள் என்று அவர்கள் தங்களை அழைத்துக் கொள்வதால் அக்கோயிலில் பூமிதேவிக்கென புதிதாக ஆலயம் கட்டியுள்ளனர் மேழித்தோரணமும் அமைத்துள்ளனர் ஏற்கனவே அக்கோயிலில் ஏற்படுத்தப்பட்டிருந்த அறம் ஏதோ குழப்பத்தில் தடைபட்டுப் போனதால் புதிதாக அவ்வறத்தை நிலை பெறச் செய்துள்ளனர் திட்டக்குடியிலும் மேழித்தோரணமும், பூமிதேவி கோவிலும் கட்டப்பட்டது.[29]

திருப்பதியில் இருந்த கோவிந்தராஜப் பெருமாள் கோயிலில் திருமங்கை ஆழ்வார்க்கு நெல் கொடை அளிக்கப்பட்ட செய்தி ஒரு கல்வெட்டில் இடம் பெறுகிறது[30] நெல்லூரிலிருந்த கரியமாணிக்கப் பெருமாள் கோயில் என்னும் விஷ்ணு கோயில் சித்திரமேழி விண்ணகர் என்று பெயர் மாற்றம் பெற்றுள்ளது[31] திருக்கோயிலூர் திருவிடைக்கழி நின்றருளின பெருமாள் சித்திரமேழி விண்ணகர் எனப் பெயர் மாற்றம் கண்டுள்ளது. இதுபோல இன்னும் பல வைணவக் கோயில்கள் பெயர் மாற்றம் கண்டுள்ளன அன்பில் கல்வெட்டு அமுதமொழிப் பெரும் பள்ளி என்னும் பௌத்த பள்ளிக்குரிய தானத்தைத் தெரிவிக்கிறது. ஓரிரண்டு சிவன் கோயில்களும் சித்திரமேழி ஈஸ்வரம் எனப் பெயர் பெற்றுள்ளன.[32]

பெரிதும் திருமால் கோயில்களையே இவர்கள் கைப்பற்றியமைக்கும் பெயர் மாற்றம் செய்தமைக்கும் ஏதேனும் தனிப்பட்ட காரணம் இருக்கக் கூடும். ஒருவேளை வேளாளர் மட்டுமே அடங்கியிருந்த பெரிய நாட்டார் குழுவில் கால்நடை மேய்ப்புச் சமூகத்தினரான யாதவர்களும் இணைந்திருக்கலாம். அவர்கள் கண்ணன் வழிவந்தவர்களாகையால் திருமால் வழிபாட்டையே முக்கியமாகக் கொண்டிருக்கலாம். அதன் காரணமாகவே திருமால் கோயில்களைப் பெயர் மாற்றம் செய்தனர் அல்லது தங்கள் வசத்திற்குக் கொணர்ந்தனர் எனலாம். பெரிய நாட்டார் என்போர் பல சமூக இனங்களிலிருந்து வந்த ஒரே தொழிலைச் செய்யக் கூடியவர்களாக இருந்தனர் என்பதை நெல்லூர்க் கல்வெட்டு ஒன்றைச் சான்று காட்டி வலியுறுத்துகிறார் எ சுப்பராயலு.[33]

வைணவத்தில் யாதவர் போன்ற பிராமணர் அல்லாதவர்கள் இணைந்ததற்கான காரணத்தை பர்டன் ஸ்டெயின் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளார் இராமானுஜரின் புரட்சிகரமான சீர்திருத்த நடவடிக்கையின் காரணமாக சாத்தாத வைணவர் என்னும் பெயரில் பூணூல் அணியாத சூத்திரர்கள் கோயில் பணிகளில் ஈடுபடுத்தப்பட்டனர்[34] அவர்கள் கோயில் பூசைப் பணிகள் தவிர சிறு நிர்வாகப் பணிகளில் நியமிக்கப்பட்டனர் வைணவத்தில் வடகலை, தென்கலை எனப் பிரிவுகள் ஏற்படுவதற்கும்கூட இது காரணமாக அமைந்தது எனலாம். ஆழ்வார்கள் பாடிய பாசுரங்கள் ஆரிய வேதத்திற்கு எதிரான தமிழ் வேதம் எனப்பட்டன தமிழ் மொழியிலும்கூட வடமொழியும் கலந்து எழுதப்பட்ட மணிப்பிரவாள நடை உருவானதற்கும் இத்தகைய சமூகக் கலப்புகளே காரணம் எனக் கருதலாம்.[35]

சைவத்திலும் வைணவம் போன்றே பிராமணர் அல்லாதாரின் எழுச்சி தோன்றத் தொடங்கியது. பல்வேறு சைவ மடங்கள் தோன்றி (ஆதீனங்கள்) சைவம் தழைக்கப் பாடுபட்டதுடன் தமிழ்க் கல்வியை மக்களிடம் கொண்டு சேர்க்கவும் உதவின. சிவஞானபோதம் என்னும் சைவ சித்தாந்தம் மெய்கண்டாரால் உருவாக்கப்பட்டதும் இக்காலத்தில்தான் சைவ

மடங்களில் பெரும்பாலும் வேளார்களே தலைமைப் பீடத்தில் இருந்தனர். எனவே பிரமதேயங்களுக்கு எதிரான சித்திரமேழி பெரிய நாடு என்னும் இயக்கம் உருவாகியதன் பின்விளைவாக இத்தகைய சமூக மாற்றங்கள் தோன்றின மேலும் பள்ளிநாட்டார் (வன்னிய வீரர்கள்) நத்தமான், சுருதிமான், மலையமான் என்னும் பல்வேறு சமூகக் குழுக்கள் தோன்றி ஒன்றுபட்ட சமூக நடவடிக்கைகளை மேற்கொண்டனர் இதன் பின் விளைவாக பொ.ஆ 14ஆம் நூற்றாண்டளவில் இடங்கை, வலங்கை என்னும் சமூகப் பிரிவுகளும் தோன்ற ஆரம்பித்தன. கீழப்பழுவூர், ஆதனூர், உறத்தூர், எறகுடி, வாலிகண்டபுரம், ரத்னகிரி, மடம், எழுவம்பாடி, திருநெடுங்களம், வெங்கூர், ஆடுதுறை போன்ற ஊர்களில் இத்தகைய குழுக்கள் செயல்பட்டமை குறித்து கரசிமா விரிவாக ஆராய்ந்து எழுதியுள்ளார்[36] கலனையார் என்னும் பல் தொழில் குழுக்களும் தங்களுக்குள் ஒருவிதமான கூட்டுறவை ஏற்படுத்திக் கொண்டு அமைப்பு ரீதியாக இணைந்தனர் என்பதையும் ஆலங்குடி ரதகாரர்கள் கல்வெட்டு விளக்குகிறது.[37]

சித்திரமேழி பெருக்காளர், பெரியநாட்டார் என்னும் வேளாளர் அமைப்பினரோடு பொ.ஆ 12ஆம் நூற்றாண்டளவில் வணிகக் குழுவினர் இணைந்து செயல்படத் தொடங்கினர் வேளாண் மக்கள் பூமிதேவியின் புத்திரர்கள் என்றால் வணிகர்கள் பரமேஸ்வரியின் மக்கள் என்று தங்களைக் கூறிக் கொண்டனர் இவ்விரண்டு வகையாருடன் கலனையார் எனும் தொழிற்குழுக்களும் இணைந்து கொண்டன இவ்விதமான ஒற்றுமைக்கும் கூட்டு நடவடிக்கைகளுக்கும் சான்றாக அமைகிறது பிரான்மலைக் கல்வெட்டு.[38] பிரான்மலையில் கிபி 13ஆம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் கூடிய இக்குழுக்களின் கூட்டம் தமிழகம் தழுவிய அளவில் மிகப்பெரிய மாநாடு என்னும்படியாக அமைந்துள்ளது. இதில் கலந்து கொண்டவர்களின் பெயர்கள் அவர்கள் சார்ந்துள்ள நாட்டுப் பிரிவுகள் விரிவாகக் குறிப்பிடப்படுகின்றன. இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ள காலம் பொ.ஆ. 13ஆம் நூற்றாண்டாகலாம் அரசன் பெயர் எதுவும் இதில் குறிப்பிடப்படவில்லை பாண்டிய நாட்டில் இக்கல்வெட்டு இடம் பெற்றிருப்பினும் அக்காலகட்டத்தில் அரசுக்குக் கட்டுப்பட்ட இயக்கமாக இவ்வியக்கம் செயல்படவில்லை என்பதையே இது காட்டுகிறது. பதினெண் விஷயம், ஐநூற்றுவர், அவர்களுக்கான படை வீரர்கள், பெரியநாட்டார், கலனையார் எனப் பல பிரிவினரும் ஒன்றுபட்ட ஒரு பெரிய சமூக இயக்கமாக 13ஆம் நூற்றாண்டின் இறுதியில் உருவானதையே பிரான்மலைக் கல்வெட்டு காட்டுகிறது எனலாம் சோழ அரசின் உறுதியற்ற தன்மையும், புதிய புதிய நிலவுடைமையாளர்களின் தோற்றமும், சாதியக் குழுக்களின் ஒருங்கிணைவும் சமூகத்தில் ஒருவிதமான குழப்பான நிலையையே படம் பிடித்துக் காட்டுகின்றன

தாமரைப்பாக்கத்தில் பொ.ஆ. 1057ல் முதலில் தோன்றிய வேளாண் மக்களின் சிறிய அளவிலான எழுச்சியே பல்வேறு விதமான சமூகங்களின்

இணைவிற்கும், எழுச்சிக்கும் வழிகாட்டியது எனலாம். பிரமதேயங்களின் அபரிமிதமான வளர்ச்சியும், அதனுள்ளும் தனியூர்கள் பெற்ற சிறப்புக் கவனமும் பெரிய நாடு அமைப்பு தோன்றுவதற்குக் காரணமாக இருந்தது என்பது ஒரு காரணம் மட்டுமே. அதற்கும் மேலாக அரசுக்கும், அதிகாரிகளின் நடவடிக்கைகளுக்கும் எதிராகவும் மக்கள் செயல்படத் துணிந்தமையும் ஒரு முக்கிய காரணம். பிற்காலத்தில் சாதிக் குழுக்கள் தோன்றவும், சாதிப் பிரிவினைக் கூறு கூர்மைப்படவும் இதுபோன்ற எழுச்சிகளே காரணமாகிவிட்டன

## அடிக்குறிப்புகள்

1. K.V. Subramania Aiyar, *Quarterly Journal of Mythic Society,* Vol. 45, P. 35
2. Burton Stein, *Peasant State and Society in Medieval South India,* P. 217. Oxford Univerity Press, Newyork, 1980
3. SII. Vol I. · 40, 41
4. Y Subbarayalu, *Political Geography of the Chola Country,* pp. 45-46. Dept of Archaeology, Chennai, 1973
5. Burton Stein, op.cit, P. 162
6. SII. Vol. VI . No. 48, 50, 58
7. Noboru Karashima, *South Indian History and Society,* P. 188, F.N.No. 22, Oxford Univerity Press, Madras, 1984
8. *தாமரைப்பாக்கம் கல்வெட்டுகள், எண் 1/1998, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை, 1999*
9. *மேலது, எண் 26/1998*
10. *மேலது எண் 8/1998*
11. S. Rajavelu 'Migration of Brahmins in Tamilnadu under the Pallavas, *Kaveri,* et.al. S. Rajagopal, P. 404, 2001
12. *பல்லவர் செப்பேடுகள் முப்பது, ஓங்கோடு செப்பேடு பக். 282, சுலோகம் 2, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1999*
13. C. Santhalingam, *Studies in Archaeology,* P. 119, Sekar Publications, Chennai, 2011
14. Burton Stein, Op.cit, PP. 141-142
15. *SII.* Vol. VI . No. 347
16. *Ibid,* No 349
17. C. Santhalingam, Op cit, P. 119
18. K.A.N Sastri, *The Colas* 1955, P. 465
19. Y. Subbarayalu, *Political Geography of the Chola Country,* 1973. P. 94

20. Kesavan Veluthat, *The Political Structure of early Meideval South India,* 1999, pp. 215-216

21. R. Champakalakshmi, *Trade, Ideology and Urbanisation,* 1996, pp. 378-381

22. R Champakalakshmi, The Study of Settlement Patterns in the Chold period· *Some perspections, Man and Envıronment,* XIV, 1989, P 98

23. Burton Steın, op.cit, P 142

24. Noboru Karashıma, *South Indian History and Society,* 1984, P 48 & 188.

25. Noboru Karashıma, *Ancient to Medieval,* P. 132, Oxford Univerıty Press, Newyork, 2009

26. *செ. இராசு, கொங்கு வேளாளர் செப்பேடு பட்டயங்கள், பக். 207, 216, கொங்கு ஆய்வு மையம், ஈரோடு, 2007*

27. Noboru Karashıma, *Ancient to Medieval,* PP 115-135

28. *SII.* Vol. VII : No. 129

29. *SII.* Vol VIII No. 291

30. *Thrimala Thiruppathi Devasthanam Inscriptions,* Vol. 1, No. 40

31. *SII* Vol. V. No.496

32. *SII* Vol

33. Y Subbarayalu, *South India Under the Cholas,* P. 132, Oxford Unıversity Press, 2012

34. Burton Steın, Op.cit, P. 233

35. G. Vıjayavenugopal, 'Sri Vaishnavısm and Social Reformation' *Tamil Studies,* Vol II, PP 73-79, Aprıl 1982, Et al. N. Subramanian, Internatıonal Institute of Tamıl Historıcal Studies, Madras

36. Noboru Karashima, *Ancıent to Medieval,* PP. 124-127, Oxford Univerıty Press, 2009

37 *SII.* Vol. VI, No. 439

38. *SII.* Vol. VIII, No. 442

## பட்டியல் 1

*1.* *உத்திரமேரூர்ச் சதுர்வேதிமங்கலம்*

*2* *காவிதிப்பாக்கமான விக்கிரம சோழச் சதுர்வேதிமங்கலம்*

*3.* *உக்கலாகிய விக்கிரமாபரணச் சதுர்வேதிமங்கலம்*

*4.* *திருவோத்தூர்*

5. மானாமதி

6. தக்கோலம் சத்ரியசிகாமணிபுரம்

7. திருக்கழுக்குன்றம் என உலகளந்த சோழபுரம்

8 மதுராந்தகச் சதுர்வேதிமங்கலம்

9 திருஅச்சிறுபாக்கம்

10 பிரமதேசமான ராசமல்லச் சதுர்வேதிமங்கலம்

11 சக்கரமூதூர்

12. திருப்பாற்கடல்

13. சம்மழலை

14 திரையனேரியான உத்தமசோழச் சதுர்வேதிமங்கலம்

15. சிவபாதசேகரமங்கலம்

16 கரைவழி வாணபுரம்

17. சிறுகானபூர் ராஜராஜச் சதுர்வேதிமங்கலம்

18. திருவல்லம்

19 மணிமங்கலமாகிய லோகமாதேவி சதுர்வேதிமங்கலம்

20 கலிகேசரி சதுர்வேதிமங்கலம்

21. தலசயனம் (தன்கூறு)

22. தனியூர் திருவண்ணாமலை

23. எண்ணாயிரம் (பிரமதேசம்)

24 வீரநாராயணச் சதுர்வேதிமங்கலம் (உடையார்க்குடி)

25 வானவன்மாதேவிச் சதுர்வேதிமங்கலம் (எறும்பூர்)

26. உலகமாதேவிபுரம்

27. பரவைபுரம் (பனையவரம்)

28. திருவாலீஸ்வரம் (அம்பாசமுத்திரம்)

29 ஆத்தூர்

30 பெரும்பற்றப்புலியூர் (சிதம்பரம்)

31 திருவெள்ளறை

32. பாகூர்

33. திருபுவனி

34. விழுப்புரம்

35. ராகாசதுர்வேதிமங்கலம் (மன்னார்குடி)

## பட்டியல் 2

## சித்திரமேழி பெரியநாடு அமைந்த ஊர்கள்

1. தாமரைப்பாக்கம்
2. நெல்லூர்
3. தும்கூர்
4. கொல்லந்துறையான கண்டகோபால பட்டினம்
5. பள்ளிக்கட்டு ஏனாதிபாடி
6. ஆமையூர்
7. கம்பத்தான்வெளி (அச்சிறுபாக்கம்)
8. குடிப்பள்ளி
9. உத்தமசோழ வளநாடு
10. சக்கரமூதூர்
11. திருப்பதி
12. கொடுங்கோலூர்
13 சிவநாதபுரம் (வேலூர்)
14. திட்டக்குடி
15. பிரான்மலை
16. திருக்கோயிலூர்
17. மன்னார்குடி
18. அன்பில்
19. விசயமங்கலம்
20 சேந்தமங்கலம்
21. பருத்திப்பள்ளி

# 71. செய்தித் திரட்டு – புதிய கண்டுபிடிப்புகள்

## 71 : 1 திருமால் சிற்பங்கள்



விழுப்புரம் மாவட்டத்தில் விழுப்புரம்-திருச்சிராப்பள்ளி சாலையில் 14 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள அரசூரில் தத்தனூரரான் என்பவர் நிலத்தை சமன் செய்தபொழுது செங்கல் கட்டடமைப்புடன் சில சுடுமண் விளக்குகள் நந்தி, கல்செக்கு ஆகியவற்றுடன் திருமால் சிற்பம் ஒன்று கண்டுபிடிக்கப் பட்டது. திருமால் சம பங்கத்தில் நின்ற கோலத்தில் தலையில் கிரீட மகுடமும் நான்கு கைகளைப் பெற்றும் காணப்படுகிறார். மேலிரு கைகளில் சங்கும் சக்கரமும் கீழிரு கைகளில் இடக்கை தொடையில் இருத்தியும் வலக்கையில் வரத முத்திரையிலும் காட்டப்பட்டுள்ளார். கணுக்கால் வரை கீழாடை செல்கிறது. முப்புரி நூல் கீழ் வலக்கையின் மேலாகச் செல்கிறது. கழுத்தில் கழுத்தணி உள்ளது. பலகைக் கல்லில் புடைப்பாக உள்ள இச்சிற்பம் பல்லவர் காலத்தைச் சார்ந்ததாக லாம்

பெண்ணையாற்றின் கிளை ஆறான மலட்டாற்றின் வடகரையில் திருவெண்ணெய் நல்லூருக்கு அருகில் அமைந்துள்ள சிறுமதுரையில் உள்ள வயல் வெளியில் நின்ற நிலையில் திருமால் சிற்பம் ஒன்று காணப்படுகிறது. சிலையில் அடிப்பகுதி நிலத்தில் புதைக்கப்பட்ட நிலையில் உள்ள இச்சிற்பம் உள்ள பகுதியில் செங்கல் தளி ஒன்று அழிந்திருப்பதற்கான சுவடுகள் காணப்படுகின்றன. திருமாலின் சிற்பம் நான்கு கைகளுடன் தலையில் கிரீட மகுதம் பெற்று விளங்குகிறது. கைகளின் மேலிரு கைகளில் பிரயோக சக்கரமும் சங்கும் பெற்று கீழிரு கைகளில் முறையே சின் முத்திரையும் ஊருமுத்திரைப் பெற்றும் காட்சியளிக்கின்றது. திருமால் காதுகளில் குண்டலங்களும் கழுத்தில் சரபலி கைகளில் வாகுவளைகள் பெற்றுத் திகழ்கிறார். மார்பில் முப்புரி நூல் செல்கிறது. பலகைக் கல்லால் புடைப்பாக உள்ள இச்சிற்பமும் பல்லவர் கலைப்பாணியைக் கொண்டு விளங்குகிறது.





தியாக துர்க்கத்தின் வடக்கே அமைந்துள்ள பல்லகச் சேரி என்ற ஊரின் சிவன் கோயில் மண்டபத்தில் திருமால் சிற்பம் ஒன்று காணப்படுகிறது. நின்ற நிலையில் கிரீட மகுடத்துடன் மேலிரு கைகளில் பிரயோக சக்கரம், சங்கு கீழிரு கைகளில் அபயம் மற்றும் கடி அஸ்தங்களைப் பெற்று இச்சிற்பம் விளங்குகிறது. கழுத்தணி மற்றும் முப்புரி நூல் கீழாடை வணப்புடன் இச்சிற்பம் விளங்கு கிறது. பல்லவர் காலத்தைச் சார்ந்ததாக இச்சிற்பம் இருக்கலாம்.

**கொற்றவைச் சிற்பங்கள்:** மேற்குறித்த சிறுமதுரையில் கொற்றவைச் சிற்பம் ஒன்றும் காணப்படுகிறது. மகிஷனின் மீது நின்ற நிலையில் உள்ள கொற்றவை எண்கைகள் பெற்று விளங்குகிறாள். வலக்கைகளில் வாள், கேடயம், அம்பு, சாட்டை காட்டப் பட்டுள்ளன. இடக்கைகளில் பிரயோகச் சக்கரம், சங்கு, நீண்ட வில் ஆகியவற்றுடன் இடமுன்கை கொற்றவையின் வாகனமான மான் மீது இருத்தப்பட்டுள்ளது. அரையாடை மார்புக்கச்சை, காதுகளில் குண்டலங்கள், கைகளில் வளையல்கள் போன்றவை காட்டப்பட்டுள்ளன. கொற்றவையின் இடப்பக்கம் வீரன் ஒருவன் தலையை அரிந்து கொள்வது போன்றும் வலப்பக்கம் உள்ள வீரன் வணங்கும் நிலையிலும் இச்சிற்பம் காணப்படுகிறது. கொற்றவையின் நீண்ட வாள் அருகே கிளி ஒன்று காணப்படுகிறது. இச்சிற்பம் பல்லவர் காலத்தைச் சார்ந்தது. இதே அமைப்பு டைய பிறிதொரு கொற்றவைச் சிற்பம் இவ்வூருக்கு அருகில் உள்ள வடகுச்சிப் பாளையம் ஆசிரியர் சுந்தரம் என்பார் வீட்டிற்கு அருகில் காணப்படுகிறது. இதன் காலமும் பல்லவர் காலமாகும்.



உளுந்தூர்பேட்டை - திருக்கோயி லூர் சாலையில் அமைந்துள்ள நெய் வனை என்ற ஊரில் அண்ணாமலை என்பார் நிலத்தில் கோயிலொன்று

இருந்து அழிந்தமைக்கான தடயங்கள் காணப்படுகின்றன. இங்கு நின்ற நிலையில் கொற்றவையின் சிற்பம் ஒன்றும் காணப்படுகிறது. புடைப்பாக உள்ள இச்சிற்பத்தில் கொற்றவை மகிஷன் மீது திரிபங்க நிலையில் காட்டப்பட்டுள்ளாள். எட்டு கைகளை உடைய கொற்றவை கைகளில் முறையே சக்கரம், சங்கு, கோடரி, கேடயம், வில், வாள் ஆகிய ஆயுதங்களும் அபயம், ஊறு முத்திரைகளையும் பெற்று விளங்குகிறாள். தலையின் மேல் பகுதியின் சிங்கம், மான் ஆகியவை காணப்படுகின்றன. அடியவர் இருவர் கொற்றவையின் இருமருங்கிலும் காணப்படுகின்றனர். அவ்விருவரில் ஒருவர் தன் தலையை அரிந்து கொடுக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளார். இச்சிற்பம் பிற்காலப் பல்லவர் காலகட்டத்தைச் சார்ந்ததாகும்.

**சி.வீரராகவன், விழுப்புரம்**

## 71 : 2 நாகப்பட்டினம் கொற்றவைச் சிற்பம்



நாகப்பட்டினத்தில் உள்ள வெளிப்பாளையம் அகஸ்தீஸ்வரர் கோயிலில் வடக்கு மாடத்தில் கொற்றவையின் சிற்பம் ஒன்று காணப்படுகிறது. மகிடனைக் கொல்லும் நிலையில் அவனது தலை வேறு உடல் வேறாக வெட்டிய நிலையில் காட்டப்பட்டுள்ளன. வெட்டப்பட்ட மகிடன் மனித வடிவில் காட்டப்பட்டு கொற்றவையை தன் வாள் கொண்டு தாக்குவது போன்று இச்சிற்பம் வடிவமைக்கப்பட்டுள்ளது. அவனது பிறிதொரு கையில் கேடயம் காணப்படுகின்றது. எட்டு கைகளுடன் உள்ள கொற்றவை தன் வலக் கைகளில் முறையே சூலம், கத்தி, சக்கரம், அம்பு கொண்டும் இடக் கைகளில் பாம்பு, கேடயம், வில், சங்கு ஆகியவை பெற்றும் விளங்குகிறாள். அவளது கையில் உள்ள பாம்பு மகிடனைத் தாக்கும் நிலையில் அமைந்துள்ளது. தமிழக மகிடாசூர மர்த்தினி மற்றும் கொற்றவை சிற்பங்களிலிருந்து மாறுபட்ட சிற்ப அமைதியைப் பெற்று இருப்பதால் சோழர்கள் காலத்தில் வட இந்தியாவிலிருந்து கொண்டு வரப்பட்ட மகிடாசூரமர்த்தினிச் சிற்பமாக இருக்க வாய்ப்பு உள்ளது.

**கோ.எழில்ஆதிரை, நாகப்பட்டினம்**

## 71 : 3 விராலிமலை கெருட மண்டப முழம்

திருச்சிராப்பள்ளி மாவட்டம், விராலி மலை வட்டம், விராலிமலை முருகன் கோயிலில் கோபுரத்தின் வடக்குப்புற அதிட்டானத்தில் அளவுகோல் ஒன்று உள்ளது. வலது இடது புறத்தில் 10 + 10 செமீ இடைவெளி



விடப்பட்டு 74 செமீ அளவில் கோடுகள் காணப்படுகின்றன. இந்த 74 செமீ அளவு ஒரு அளவு கோலைக் குறிக்கின்றதா என்பது தெரியவில்லை. இதன் வலது புறத்தில் 42 செமீ அளவுள்ள ஒரு பகுதி, 21 செமீ அளவுள்ள இரண்டு பகுதிகளாக ஒரு நேர்கோடிட்டு பிரித்துக் காட்டப்பட்டுள்ளது. இதன் இடது புறத்தில் இரண்டிரண்டாக இரு சிறு கோட்டுத்தொகுதிகள் சுமார் 10 செமீ இடைவெளியில் காணப்படுகின்றன. இது மேற்கண்ட முழத்தின் கால் பகுதியாக இருக்கலாம்.இந்த 10 செமீ மற்றும் 42 செமீ அளவுகளுக்கிடையே 18 செமீ அளவுள்ள பகுதியை இடைவெளியாகக் கருதலாம்.இதன்கீழே 'கெருடமண்டப முழம்' என்ற எழுத்துப் பெறிப்பு உள்ளது. இது எழுத்தமைதியில் சென்ற நூற்றாண்டைச் சேர்ந்ததாகத் தெரிகின்றது.

**வீ.செல்வகுமார், தஞ்சாவூர்**

**கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்**

## 71 : 4 செம்பியமங்கலம் நடுகற்கள்



திருவண்ணாமலை மாவட்டம் போளூர் வட்டம் செம்பியமங்கலத்தில் பெரணபாக்கத்தில் இரு நடுகற்கள் உள்ளன. முதல் நடுகல் பெண் ஒருத்தி வணங்கும் கோலத்தில் நிற்கிறாள். அருகே வீரன் ஒருவன் கத்தியை தலைகீழாகப் பிடித்துக் கொண்டும், இடது கரத்தை இடையில் வைத்துக் கொண்டும் நின்ற நிலையில் உள்ளான்.



இரண்டாவது நடுகல் சிற்பத்தில் வீரன் ஒருவன் கேடயத்தை இடதுகரத்தில் ஏந்தியும், வலது கரத்தில் உயர்த்திய நிலையில் வாளுடன் காணப்படுவதைக் காணலாம். இரண்டிலும் கல்வெட்டுகள் இல்லை.

**கி. ஸ்ரீதரன், சென்னை**

## 71 : 5 அரிய மகிஷாசுரமர்த்தினி



காரைக்காலுக்கு அண்மையில் இளையான்குடி தனியார் கோயிலில் மகிஷாசுரமர்த்தினி சிற்பம் ஒன்று எட்டு கைகளுடன் காணப்படுகிறது. வலக்கைகள் சக்கரம், அங்குசம், சூலம், வாள் ஆகியவற்றுடனும், இடக்கைகள் சங்கு, வில், பாசம், மகிஷனியின் நாக்கை இழுத்த நிலையில் உள்ளன. மகிஷன் முழு தோற்றத்துடன் நின்ற நிலையில் உள்ளான். மத்தினி வலக்காலைக் கீழே ஊன்றி, இடக்காலை மகிஷனியின் முதுகில் அழுத்தி மிதித்திருக்கிறது. இச்சிற்பத்தின் காலம் 11ஆம் நூற்றாண்டாகும்.

**ந. வேங்கடேசன், வில்லியனூர்**

## 71 : 6 தோலியில் சமணர் சிற்பம் கண்டுபிடிப்பு



திருவாரூர் மாவட்டம் திருத்துறைப் பூண்டி வட்டம் தோலி என்னும் கிராமத்தில் 24வது சமண தீர்த் தங்கரரான மகாவீரர் சிற்பம் கண்டு பிடிக்கப்பட்டது. 32 செ.மீ. உயரமும், 19 செ.மீ. அகலமும் கொண்டுள்ள இச் சிற்பம் அமர்ந்த நிலையில் பத்மா சனத்தில் தியான கோலத்தில் உள்ளது. சிம்மாசனம், சாமரம் வீசும் யட்சர்கள், முக்குடை போன்ற அமைப்புகள் இச்சிற்பத்தில் காணப்படு கின்றன. நீண்ட காதுகளும், மூடிய நிலையில் கண்களும் கொண்டு திகம்பர மேனியாக தலையின் பின்புறம் பிரபையுடன் இச்சிற்பம் காணப்படுகிறது. பிற்காலச் சோழர் காலத்தைச் சேர்ந்தது. திருவாரூர் மாவட்டத்தில் வேம்பழகன் காடு, முன்னியூர், தம்பளாம்புலியூர், நாகப்பட்டினம், புலியூர் செராங்குடி, பஞ்சநதிக்குளம் ஆகிய இடங்களில் மண் சிற்பங்கள் உள்ளன.

**கோ. தில்லை கோவிந்தராஜன்,**
**பா. ஜம்புலிங்கம், தஞ்சாவூர்**

## 71 : 7 கரூர் மாவட்டத்தில் புதிய கோயில்கள் கண்டுபிடிப்பு



கரூர் மாவட்டம் கரூர் வட்டத்தில் வீரக்கணம் பாடி குடிவண்டை என்ற ஊருக்கு அருகில் உள்ள மலைமீது கற்றளிக்கோயில் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. இக்கோயில் சிவனுக் குரியதாகும். இக்கோயிலின் அதிட்டானப் பகுதியில் மூன்றாம் குலோத்துங்கன் காலக் கல்வெட்டுகள் உள்ளன. இங்குள்ள பாறை பகுதியில் 8ஆம் நூற்றாண்டு முத்தரையர் கால கல்வெட்டு உள்ளது. (காண்க கல்வெட்டுப் பகுதி. வீரக்கனம்பட்டி முத்தரையர் கல்வெட்டு) முத்தரையர் காலக் கோயில் பிற்காலத்தில் கற்றளியாக மாற்றப்பட்டிருக்கலாம்.

கரூர் அருகில் கிருஷ்ணராயபுரம் வட்டத்தில் பஞ்சப்பட்டி என்ற இடத்தில் சிவன் கோயிலொன்று கண்டுபிடிக்கப்பட்டது. இக்கோயிலில் இராசேந்திரன சோழன் கல்வெட்டு காணப்படுகிறது.

**கி. பாலசுப்ரமணியம், கரூர்**

## 71 : 8 திருவள்ளூர் மாவட்டத்தில் ஏர் புடைப்புச் சிற்பம்



திருவள்ளூர் மாவட்டம் மப்பேடு ஊரில் உள்ள சிங்கீசுவரசுவாமி திருக்கோயிலின் கிழக்கு மதிற்சுவரில் வைத்து கட்டப்பட்ட ஒரு கல்லில் புடைப்புச் சிற்பமாக 'ஏர் சிற்பம்' காணப்படுகிறது. தனிக் கல்லாக இருந்ததை கொண்டு வந்து இம்மதிற்சுவரில் வைத்து கட்டியுள்ளனர். இதுபோன்ற ஏர் சிற்பம் தனிக்கல்லில் புடைச்சிற்பமாக வழங்கப்பட்டு திருத்தணி அருகே அருள்குளம் சமணத் திருக்கோயிலில் வைக்கப்பட்டுள்ளது. கல்லின் மேற்பகுதியில் (திருமகள்) ஸ்ரீதேவியின் வடிவம் காணப்படுகிறது. கீழ்ப் பகுதியில் பூரண கும்பமும் இரு பக்கங்களில் விளக்குகளும் காணப்படு கின்றன. இதுபோன்ற ஏர் சிற்பம் சென்னைக்கு அருகில் உள்ள பொன்னேரி சிவன் கோயிலில் கருவறை சுவரில் புடைப்புச் சிற்பமாகக் காணப்படுகிறது.

**கி. ஸ்ரீதரன், சென்னை**

## 71 : 9 துர்க்கை அம்மன் சிலை

திருவண்ணாமலை மாவட்டம், செய்யார் வட்டம், கீழ்கொளத்தூரின் கிழக்கே உள்ள சிவன் கோயிலுக்கு செல்லும் வழியில் வயலில் துர்க்கை அம்மன் சிலை நடப்பட்டு உள்ளது. துர்க்கை அம்மன் எட்டு கைகளுடன் தலையில் மகுடத்துடன் வலது கைகளில் முறையே கத்தி, மணி, சக்கரம் மற்றும் நான்காவது கை அபய முத்திரையும் காணப்படுகின்றன. துர்க்கையின் இடது கைகளில் முறையே சங்கு, வில், கேடயம் மற்றும் கத்ய வலம் பித முத்திரை போன்றவை இருக்கின்றன. துர்க்கைக்கு வலப்புறம் மானும், இடதுபுறம் பாயும் சிங்கமும் செதுக்கப்பட்டுள்ளன. துர்க்கை மார்பகத்தை குசபந்தம் அலங்கரிக்கிறது. இடுப்பில் கீழாடை கணுக்கால்வரை தொங்குகிறது. துர்க்கையின் காலடியில் பக்கத்திற்கு ஒரு அடியார் வீதம் இருவர் பணிவுடன் வணங்குகின்றனர். 9ஆம் நூற்றாண்டில் பிற்கால பல்லவ மன்னர் காலமாகலாம்.

**ஆர். மணி, காஞ்சிபுரம்**

## 71 : 10 மேலக்குறிச்சி – பெருங்கற்காலச் சின்னங்கள்



கடலூர் மாவட்டம், விருத்தாச்சலம் வட்டம் விருத்தாச்சலத்திலிருந்து மேற்கே 25 கி.மீ. தொலைவில் மேலக்குறிச்சியில் பெருங்கற்காலப் பண்பாட்டைச் சார்ந்த 'ஈமக்காடு' காணப்படுகிறது. ஈமக்காடு சுமார் 15 ஹெக்டேர் பரப்பளவில் காணப்படுகிறது. இந்த ஈமக்காட்டில் மேற்பரப்பில் கல்வட்டங்கள் காணப்படுகின்றன. இதில் 50க்கும் மேற்பட்ட கல்வட்டங்கள் முழுமையாகவும், எஞ்சிய கல்வட்டங்கள் சிதைந்த நிலையிலும் உள்ளன.

**ஜெ. சௌந்திரராஜன், சென்னை**

## 71 : 11 மண்டபம் – பெருங்கற்கால ஈமத்தாழிகள்

காஞ்சிபுரம் மாவட்டம் ஆர்ப்பாக்ககம் என்ற ஊருக்கு அருகில் காஞ்சிபுரம் - உத்திரமேரூர் செல்லும் சாலையில் 13 கி.மீ. தொலைவில் பாலாறு மற்றும் செய்யாறு ஆகிய இரு ஆறுகளுக்கிடையே உள்ள மண்டபம் என்ற ஊரில் பெருங்கற்கால ஈமத்தாழிகள் 50 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகின்றன. சில தாழிகளின் உள்ளே மட்தட்டுகளும், சிறிய மட்பானைகளும் உள்ளன. மூடியுடன் புதைக்கப்பட்ட தாழிகளும் இங்கு

கிடைக்கின்றன. சில தாழிகளில் உள்ளே எவ்வித பொருட்களும் இடம் பெறவில்லை. சிறிய இரும்பு கத்தி ஒன்றும் கிடைத்தது.

**சி. இளங்கோ, வீ. அரசு, சென்னை**

## 71 : 12 குற்றாலம் ஐந்தருவிப் பகுதியில் தொல்லியல் தடயங்கள்



குற்றாலம் ஐந்தருவிப் பகுதியில் மலை மீது 20 கி.மீ. தொலைவில் வாய்தா மணி என்ற இடத்தில் இயற்கையாக அமைந்த குகையும் பாறைகளின் மீது சில குறியீடுகளும் முற்றுப் பெறாத குடைவரை ஒன்றும் காணப்படுகின்றன. நீர் தெளியான் என்ற பகுதியும் கோட்டைச் சுவரின் எச்சங்களும் காணப்படுகின்றன. இங்குள்ள பாறைகளில் சில எழுத்துப் பொறிப்புகள் உள்ளன.

**எஸ். பார்வதி, குற்றாலம்**

## 71 : 13 வடலூர் துர்க்கை சிலை



கடலூர் மாவட்டம், குறிஞ்சிப்பாடி வட்டம், வடலூர் அய்யன் ஏரியின் மேற்குக் கரையில் இருந்து 100 மீட்டர் தொலைவிலுள்ள காளிக்கோயிலில் ஐந்தடி உயரமும், மூன்றடி அகலமும் கொண்ட நீள் செவ்வக வடிவிலான கற்பலகையில் புடைப்புச் சிற்பமாக துர்க்கை சிலை உள்ளது. சிலையின் தலைப்பகுதி ஜடாமகுடத்துடன் மகரபூரிமத்தால் அலங்கரிக்கப்பட்டும், நெற்றியில் கல்மணிகளால் அழகுபடுத்தப்பட்ட நெற்றி சுட்டியும், கழுத்தில் கண்டிகை, சரப்பளி, ஆரம் போன்ற அணிகலன்களும் அனைத்து கைகளிலும் காப்பு, மார்பு கச்சையின் கீழ்வயிற்றுப் பகுதியில் வீரசங்கிலியும் காணப்படுகின்றன. வலகை கைகளில் மேலிருந்ருது கீழாக சக்கரம், வாள், கபாலம் ஆகியன தாங்கியும், (ஒரு கை உடைந்துள்ளது) இடது கைகளில் சங்கு, வில், கேடயம், தர்ஜனிகஸ்தம் ஆகியவைப் பெற்றும் உள்ளது. சிலையின் முதுகுபுறத்தில் அம்புத் தூரிகை உள்ளது. இடுப்பில் அணியப்

பட்டுள்ள இடைக்கச்சையானது குஞ்சங்களுடன் அலங்கரிக்கப்பட்டும் எருமைத்தலை மீது நின்ற நிலையில் இச்சிலை வடிக்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் 12ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

**ஜெ.ஆர். சிவராமகிருஷ்ணன், சு. கண்ணன்,**
**ப. கலைச்செல்வன், அண்ணாமலை நகர்.**

## 71 : 14 செங்கம் – நடுகல்



திருவண்ணாமலை மாவட்டம், செங்கம் வட்டத்தில் செங்கத்திலிருந்து பண்ரேவ் செல்லும் வழியில் குப்பநத்தம் என்ற ஊர் 15 கி.மீ. தொலைவில் ஏரிக்கரையின் மேற்கு கரையில் 160 செ.மீ. உயரமும் 70 செ.மீ. அகலமும் கொண்ட நீள் செவ்வக வடிவிலான கற்பலகையில் வில்லேந்திய வீரனின் சிலை புடைப்புச் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது. வீரனின் இடது கையில் வில்லை ஏந்தி வலது கையால் அம்பை வில்லில் தொடுத்து இடது பக்கத்தில் விரைகின்றான். தலைமுடி உருண்டையாக கட்டி தலையின் பின்புறம் வலது பக்கத்தில் முடியப்பட்டுள்ளது. இவ்வீரனின் முகம் நீள் வட்ட வடிவில் நீண்ட புருவமும், அகன்ற மூக்கும், முறுக்கி உயர்த்திய மீசையுடன் காது மடல்கள் விரிந்தும், காதுகளில் காதணிகளுடன் காணப்படுகிறது. கழுத்தில் மணிஆரமும் கரங்களில் தோள்வளையும், இரு கால்களில் வீரக்கழல்களும், கைகளில் காப்புவளையும் அணியப்பட்டுள்ளன. முகம் வீரத்தோற்றத்தைக் காட்டுகிறது. பின்புற முதுகில் அம்புத்தூரிகையும் அணியப்பட்டுள்ளது. இடையில் கட்டிய ஆடையானது அழகுடனும் மடிப்புகளுடனும் செதுக்கப்பட்டுள்ளது. இப்புடைப்புச் சிற்பத்தின் காலம் பொ.ஆ. 17-18ஆம் நூற்றாண்டாகும்.

**ப. கலைச்செல்வன், ஜெ.ஆர். சிவராமகிருஷ்ணன்,**
**சு. கண்ணன், அண்ணாமலைநகர்**

## 71 : 15 காடகநல்லியில் பெருங்கற்சின்னங்கள்

ஈரோடு மாவட்டம், சத்தியமங்கலம் மலைப்பகுதியில் அமைந்துள்ள ஊர் காடகநல்லி, இவ்வூரின் வடபகுதியில் மேய்ச்சல் நிலப்பகுதியில் பெரிய கற்களைக் குவித்து நடுவில் ஒரு பெரிய பாறைக்கல்லை குத்துக் கல்லாக

நிறுத்திய பெருங்கற்சின்னம் உள்ளது. நடுவில் குத்துக்கல் இல்லாது பெருங்கற்களைக் குவித்து வைத்த மற்றொரு பெருங்கற் சின்னமும் காணப்படுகிறது ஊரின் தென்பகுதியில் உள்ள சிக்கூர் என்ற இடத்தில் வட்டமாகக் பெருங்கற்கள் வைக்கப்பட்ட கல்வட்டப் பெருங்கற்சின்னம் உள்ளது சத்தியமங்கல மலைப்பகுதி கர்நாடக மாநில எல்லையில் அமைந்துள்ளமையால் இப்பெருங்கற்சின்னங்கள் தொல்லியலாரின் ஆய்வுக்கு முக்கியத்துவம் பெறுகின்றன

**அ. பழனியப்பன், சம்பை**

## 71 : 16 ஊசிமலை நடுகற்கள்

ஈரோடு மாவட்டம், பவானி வட்டம், பர்கூர் பகுதியில் உள்ள ஊசிமலையில் ஒரே இடத்தில் ஏழு நடுகற்கள் உள்ளன இவை காட்டு விலங்குகளோடு போரிட்டு மடிந்த வீரர்களுக்கானவை இவற்றில் எழுத்துக்கள் பொறிக்கப்படவில்லை. புலியுடன் சண்டையிடும் வீரர் நடுகற்கள் இரண்டு அல்லது மூன்று அடுக்குச் சிற்பங்களுடன் காணப்படுகின்றன வீரன் புலியுடன் அதன் வாயைப் பிளந்து குறுவாளால் குத்த அவனுக்கு பணிப்பெண் அல்லது மனைவி சாமரம் வீசுவதும், விண்மகளிர் இருவர் அவனை விண்ணுலகம் அழைத்துச் செல்வதும் அவன் சிவபதவி அடைந்து சிவலிங்கத்தை வழிபடுவதும் பொதுவான சிற்பக்காட்சி களாகும் ஒரு நடுகல்லில் வரிசையாகத் துளைகள் காணப்படுகின்றன இவை இந்நடுகற்களைப் பிற்காலத்தில் வேறு பயன்பாட்டிற்கு உட்படுத்த முனைந்ததைக் காட்டுகின்றன

**அ. பழனியப்பன், சம்பை**

## கருத்துப் பரிமாற்றம்

# 72. அண்மைக்கால இரு கல்வெட்டுக் கண்டுபிடிப்புகள்

**சு. இராசவேலு, தஞ்சாவூர்**

அண்மையில் முனைவர் வேதாசலம் அவர்கள் கீழக்குயில்குடி சமணர் மலையில் புதியதாக தமிழிக் கல்வெட்டு ஒன்றைக் கண்டுபிடித்தார் இதேபோன்று எடக்கல்லில் பேராசிரியர் இராகவ வாரியர் அவர்கள் 5-6 ஆம் நூற்றாண்டைச்சார்ந்த கல்வெட்டுப் பொறிப்பு ஒன்றைக் கண்டு பிடித்தார் இவ்விரு கல்வெட்டுகளும் தனிக் கட்டுரைகளாக இவ்விதழில் இடம் பெற்றுள்ளன. இக்கண்டுபிடிப்புகள் குறித்த செய்தி தி ஹிந்து நாளிதழில் (மார்ச் 24, ஜூன் 7-2012) முனைவர் ஐராவதம் அவர்களின் புதிய வாசிப்புடன் வெளிவந்தன. இவ்விரு கல்வெட்டுகளின் மாறுபட்ட வாசிப்பை திரு நடன காசிநாதன் அவர்களும் தனியாகப் பதிவு செய்துள்ளார் சமணர் மலைக் கல்வெட்டை முனைவர் சாந்தலிங்கம் பின்வருமாறு படித்துள்ளார் 'பெரு தேருர் குழித்தை அய அம்' என்றும் முனைவர் ஐராவதம் மகாதேவன் அவர்கள் 'பெரு தோருர் குன்ற கோ அய அம்' என்றும் வாசித்துள்ளனர். இக்கல்வெட்டை திரு நடன காசிநாதன் அவர்கள் 'பாஉ தேஊர் ஊழிதம் அய் அம்' என்று படித்துள்ளார் இம்மூன்று வாசிப்புகளுமே சரியான வாசிப்பாக அமையவில்லை.

இவ்வெழுத்துகளை இக்கல்வெட்டைக் கண்டுபிடித்த முனைவர் வேதாசலம் அவர்களுடன் பதிப்பாசிரியர் நேரில் சென்று ஒளிப்படம் எடுத்ததில் எழுத்துகள் எளிதில் படிப்பதற்கு ஏற்றவாறே உள்ளன முனைவர் வேதாசலம் மற்றும் பேராசிரியர் சுப்பராயலு படித்த வாசகத்தில் ஊழிதஞை என்பதற்கு பதிலாக ஊழிறஞை என்று படித்தல் வேண்டும். தே ஊரில் வரும் 'த' விற்கும் ஊழிதஞையில் வரும் 'த' விற்கும் வேறுபாடு உள்ளது இரண்டாவது 'த' - 'ற' விற்கான தமிழிக் குறியீடாகவே உள்ளது.

முனைவர் இராகவ வாரியார் அவர்கள் எடக்கல் கல்வெட்டில் வழுமி என்று படித்து அது பிரம்மா என்பதின் மொழிபெயர்ப்பாகலாம் என்று ஊகிக்கிறார். இக்கல்வெட்டை முனைவர் ஐராவதம் அவர்கள் 'இபழமி' என்று படித்துள்ளார். மலையாள மொழிக்கான 'இ' இருப்பதாக குறிப்பிட்டு மலையாளம் கி பி 4-5ஆம் நூற்றாண்டளவிலேயே பயின்று வருகிறது என்ற கருத்தை அவர் முன்வைக்கிறார். திரு. நடன காசிநாதன் எடக்கல் கல்வெட்டின் முதல் எழுத்தை 'ஓ' எனப் படித்து 'ஓ' பழமி - 'ஓ பழமையான மனிதா' எனப் பொருள் கொள்கின்றார்

திரு. நடன. காசிநாதன் அவர்களின் கைப்பட வரைவு

"[handwritten characters]"

"ō palami" meaning ō ancient or old man or God எனப் படித்து பொருள் கொள்கிறார்.

மகேந்திர வர்மனின் பல்லாவரம் கல்வெட்டில் பட்டப்பெயர்களாக 'இடுகலி', 'இஸ்டது$_3$ஷ்டப்$_4$ரஷ்டசரிதஹ' ஆகிய விருதுப்பெயர்களில் இகரம் பயின்று வருகிறது. '3' ஐ மேலிருந்து கீழ் நோக்கி எழுதி இரண்டு புள்ளிகள் வைத்தால் அதுவே இகரமாக இக்கல்வெட்டில் காணப்படுகிறது எனவே ஐராவதம் மகாதேவன் அவர்கள் குறிப்பிடுகின்ற இகரம் தவறாகும் பிராமியில் நான்கு புள்ளிகள் இகரமாக பயின்று வளர்ச்சியுறும் காலத்தில் மேல் உள்ள இருபுள்ளிகளை இணைத்து நடுவில் வளைவைப் பெற்று கீழ் உள்ள புள்ளிகள் கொண்டோ அப்புள்ளிகள் இல்லாமலோ [symbol] / [symbol] இவ்வரிவடிவ 'இ' தான் இக்கால கட்டத்தில் காணப்படுகிறது ஒ எழுத்தும் திரு. நடன. காசிநாதன் அவர்களால் தவறாக வாசிக்கப்பட்டுள்ளது ஒ எழுத்து ஒன்றாக இணைந்து வட்டமாக இக்கால கட்டத்தில் வருவதில்லை. பல்லாவரம் கல்வெட்டில் 'ஒத', 'ஒற்றி' என்ற மகேந்திரவர்மனின் விருதுப் பெயர்களில் ஒ எழுத்து [symbol] / [symbol] இவ்வாறு பயின்று வருகின்றது. எனவே எடக்கல் கல்வெட்டு வாசகம் தமிழும் கிரந்தமும் இணைந்த கல்வெட்டு என்ற வரிசையில் வாசிக்க வாய்ப்புகள் அதிகம் இருப்பினும் இவ்வெழுத்தில் வலப்பக்கம் ஐ யுடைய இரு கோடுகள் இணைந்துள்ளன. எனவே முதல் எழுத்து பை$_3$ (bai) எனப் படிக்க வாய்ப்புண்டு. பை$_3$ எனில் இதற்கு முன் எழுத்துக்கள் அழிந்திருக்க வாய்ப்புகள் அதிகம். அல்லது இதனை ஸ்ரீ வழுதி$_2$ என்று படிக்கலாம். முற்காலப் பல்லவர்களின் மைதவோலு மற்றும் ஹிரகடகள்ளி கல்வெட்டு மற்றும் செப்பேடுகளில் ப3, தி4 ஆகிய எழுத்துகளை எடக்கல் கல்வெட்டுடன் ஒப்புநோக்கலாம்.

# 73. புதிய வெளியீடுகள்

73 : 1

**Y. Subbarayalu, *South India Under the Cholas*, Oxford University Press, Delhi, 2012, P. xviii+274, விலை ரூ. 675/–**

இந்நூல் பேராசிரியர் எ. சுப்பராயலு அவர்களின் கடந்த 30 ஆண்டு காலமாக தாம் மேற்கொண்ட ஆய்வுகளின் வெளிப்பாடாக அமைந்துள்ளது. குறிப்பாக, தென்னிந்தியாவில் சோழர்களால் வெளியிடப்பட்ட கல்வெட்டுகளின் வழி மேற்கொண்ட ஆய்வுகளின் வெளிப்பாடே இந்நூலாக அமைந்துள்ளது. இடைக்காலத்தில் சோழராட்சியில் நிகழ்ந்த சமூக, பொருளாதார அரசியல் நிகழ்வுகளையும் மாற்றங்களையும் மையமாக வைத்து பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு இதழ்களில் அவ்வவ்பொழுது வெளியிட்ட ஆய்வுக்கட்டுரைகளையும் கல்வெட்டுத் தரவுகளைக் கொண்டு மறு ஆய்வுக்கு உட்படுத்தியும் மேம்படுத்தியும் எழுதப்பட்ட கட்டுரைகளின் தொகுப்பாக இந்நூல் அமைந்துள்ளது.

இந்நூல் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு முதல் பகுதியில் ஐந்து கட்டுரைகளும் இரண்டாம்பகுதியில் பதினேழுகட்டுரைகளும் இடம் பெறுவதாக அமைந்துள்ளது. முதல் கட்டுரையில் ஆய்விற்கு களமாக விளங்குகின்ற தென்னிந்தியக் கல்வெட்டுகளைப் பற்றிய குறிப்பும் ஆய்வுகளுக்கு கல்வெட்டுகளை எவ்வாறு கையாள்வது என்பது குறித்தும் பேசப்படுகிறது. 2வது கட்டுரை கடந்த 30 ஆண்டுகளுக்கு முன்பு புதுக் கோட்டைப் பகுதியில், பொஆ 500யைச் சார்ந்த பூலாங்குறிச்சியின் 3 கல்வெட்டுகளின் சிறப்பியல்புகளை ஆய்வு செய்கிறது. மூன்றாவது கட்டுரை 11 ஆம் நூற்றாண்டின் வணிகக் குழுக் கல்வெட்டு ஒன்றைப் பற்றி விரிவாக ஆய்வு செய்கிறது.




இப்பகுதியில் அடுத்தாக அமைந்துள்ள கட்டுரை ஊர்ப்

பெயர் மற்றும் ஆள்பெயர்கள் பற்றியது. கல்வெட்டுகளில் பயின்றுவரும் ஊர்ப் பெயர்களும் ஆள்பெயர்களும் அவ்வக்கால சமூகப் பொருளாதார அமைப்பை எவ்வாறு உணர்த்துகின்றது என்பது குறித்தும் ஆள் பெயர்களுடன் இணைந்த பட்டப்பெயர்கள் அவர்கள் சமூக, அரசியலில் எத்தகைய பங்கு வகித்தனர் என்பதையும் எடுத்தியம்புகிறது இப்பகுதியில் அமைகின்ற இறுதியான கட்டுரை சோழர்காலக் கல்வெட்டுகளில் நிலவிய சில சொற்களுக்கான விளக்கங்களை அளிக்கும் விதத்தில் அமைந்துள்ளது

இந்நூலின் 2வது பகுதியில் 12 கட்டுரைகள் அமைந்துள்ளன இப்பகுதி சோழர்கால அரசு, நிலவுரிமை, சோழர்கால வேளாண்மை மற்றும் வணிக அமைப்புகள், நிலவுடைமையாளர்களுக்கும், வேளாண்குடிகளுக்கும் நிலவிய உறவு நிலை போன்றவற்றை விரிவாகக் குறிப்பிடுகின்றன இப்பகுதியில் அமைந்துள்ள கட்டுரைகள் நில அளவை முறை, நிலங்களை அளக்கப் பயன்படுத்தப்பட்ட அளவுகோல்கள் ஆகியவற்றையும் சோழர்கால நிலவரி மற்றும் பிறவரிகள் குறித்தும், ஆளுங்கனம், மூலபருடையார், சபை ஆகியவற்றைக் குறித்தும் ஊரார், நாட்டார், பெரியநாட்டார் போன்ற அமைப்புகள் குறித்தும் விரிவாகப் பேசுகின்றன

சோழர்காலத்திய நில உரிமையாளர்கள் வேளாண் குடிகள் மற்றும் அடிமைகள் குறித்து பிறிதொரு கட்டுரையில் பேசப்படுகிறது சமூகப் பொருளாதார மாற்றத்தின் காரணமாக 11ஆம் நூற்றாண்டில் புதிதாகத் தோன்றிய வலங்கை இடங்கைப் பிரிவினர் குறித்து மற்றொரு கட்டுரை விவரிக்கின்றது இதே போன்றுஅஞ்சு வண்ணம் என்ற வணிகக் குழு குறித்தும் எறிவீரப்பட்டிணம் என்ற வீரர்கள் அமைப்பு குறித்தும், வீரர்கள் மற்றும் அரசிற்கு இடையில் நிலவிய தொடர்புகள் குறித்தும் மற்றொரு கட்டுரை விவரிக்கின்றது

சோழ அரசின் முக்கிய கூறுகளான அரசன், அரசாட்சிப் பிரிவுகள், சமூகப் பொருளாதார அமைப்புகள், அரசு அலுவலர்கள், இராணுவம் மற்றும் அரசு வருவாய் குறித்து விரிவாக சோழர் அரசு என்ற தலைப்பில் அமைந்த கட்டுரையில் விவாதிக்கப்பட்டுள்ளது இதன் தொடர்ச்சியாக சோழர் அரசின் தன்மை குறித்தும் இறுதி கட்டுரையில் விவரிக்கப் பட்டுள்ளது

இந்நூலில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளுக்கேற்ப வரைப்படங்களும், நிலப்படங்களும் ஒளிப்படமும் சேர்க்கப்பட்டுள்ளதுடன் சில கல்வெட்டு களும் அதன் விளக்கங்களும் அட்டவணைகளும் இணைப்பாகவும் கொடுக்கப்பட்டுள்ளமை கட்டுரைகளை எளிதில் புரிந்து கொள்ள உதவுவதாக அமைகின்றன மேற்கொண்டு சோழர் பேரரசைப் பற்றி ஆய்வு செய்ய விரும்புபவர்களுக்கு இந்நூலின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ள நூற்பட்டியல் பயனுள்ளதாக அமையும் கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள சொற்களின் சொல்லடைவு இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளமை சிறப்புக் குரியது.

**சு. இராசவேலு, தஞ்சாவூர்**

**K. Rajan, N. Athiyaman, *Archaeology of the Palani hills*, Heritage India Trust, Thanjavur, 2011 Sharada Publishing House, Delhi, P. XXIII +144, Plates 205, Price 2700/-**

தமிழகத்தில் கடந்த இருநூறு ஆண்டு காலமாக தொல்லியல் அகழாய்வுகள் நடந்து வந்துள்ளன. ஆங்கிலேயர்கள்,தொல்லியல் ஆர்வ மிகுதியின் காரணமாக தமிழகத்தில் பல களஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு சில இடங்கள் அவர்களால் அகழாய்வுகளுக்கும் உட்படுத்தப்பட்டன. தமிழகத்தில் செய்யப்பட்ட அகழாய்வுகளில் பெருங்கற்காலம் எனப்படும் இரும்புக் காலத்தைச் சார்ந்த ஈமப்பகுதிகளும் அவற்றுடன் தொடர்புடைய சில வாழ்விடப்பகுதிகளும் தான் மிகுந்த அளவில் அகழாய்வுகள் செய்யப்பட்டுள்ளன. அவ்வரிசையில் கொடைக்கானல் பகுதியில் அமைந்துள்ள தாண்டிக்குடி அகழ ாய்வு சிறப்பிடம் பெருகிறது.

பொதுவாக அகழாய்வுகள் பற்றிய அறிக்கைகள் அகழாய்வுகள் செய்யப்பட்ட பின் நீண்ட காலத்திற்குப் பிறகு வெளியிடப்பட்டோ அல்லது வெளிவராமலோ இருக்கின்ற சூழலில் நூலாசிரியர்கள் இணைந்து 2004, 2006 ஆம் ஆண்டுகளின் இருபருவங்களில் மேற்கொண்ட அகழாய்வுகளின் முடிவுகளை குறுகிய காலத்திற்குள் நூலாக வெளியிட்டுள்ளமை பாராட்டுக்குரியது.

கொடைக்கானல் பகுதி கீழைப் பழனி மலைத் தொடர் என வழங்கப்பட்டு ஆங்கில ஆய்வாளர்கள் பலரின் தொல்லியல் கள ஆய்வுக்கு உட்படுத்தப் பட்ட பகுதியாகும். இவர் களுள் பேராயர் ஆங்கி லெட் என்பார் கொடைக் கானல் மலைப் பகுதிகளில் எண்ணற்ற பெருங்கற்கால ஈமச் சின்னங்களைக் கண் டறிந்து சில அகழாய்வு களும் செய்துள்ளார். அவற்றைப் பற்றிய சிறு குறிப்பும் அக்காலகட்டத் தில் அவரால் வெளியிடப் பட்டது. அவருக்குப்பின்



அறிவியல்சார் அகழாய்வு ஒன்றினை இப்பகுதியில் மேற்குறித்த தமிழ்ப்பல்கலைக் கழக பேராசிரியர்களே மேற்கொண்டு அகழாய்வுத் தரவுகளை நூலாகப் படைத்துள்ளனர்.

இந்நூல் 8 இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் இயல் தாண்டிக்குடியின் முந்தைய வரலாறு இலக்கியம் மற்றும் கல்வெட்டுச் சான்றுகள், இப்பகுதியில் நடை பெற்ற முந்தைய தொல்லியல் கள ஆய்வுகளின் வரலாறு ஆகியவற்றைக் கொண்டுள்ளது. இரண்டாவது இயலில் இப்பகுதியின் நிலவியல் கூறுகளும் மூன்றாவது இயலில் அகழாய்வுக்குட்படுத்தபட்ட தாண்டிக்குடி மற்றும் பிற இடங்களின் நில அமைப்பு முந்தைய கள/அகழாய்வுகளில் வெளிப்பட்ட அரும் பொருட்களின் தன்மை ஆகியவைக் கூறப்படுகின்றன.

இந்நூலின் நான்காவது இயல் தாண்டிக்குடி ஊரின் தொல்லியல் சிறப்பியல்புகளை எடுத்துரைக்கின்றது. ஐந்தாவது இயல் அகழாய்வுக்கு உட்படுத்தப்பட்ட குழிகளின் தன்மை, அகழாய்வுமுறைகள் அக்குழிகளில் கிடைத்த பண்பாட்டு எச்சங்கள் ஆகியவற்றை எடுத்துரைக்கின்றது. இவ்வூரின் 8 இடங்களில் உள்ள பெருங்கற்கால ஈமச்சின்னங்கள் அகழாய்வுக்குட்படுத்தப்பட்டு ஆய்வு மேற்கொள்ளப்பட்டதை விரிவாக இவ்வியல் குறிப்பிடுகிறது அகழாய்வுக்குட்படுத்தப்பட்ட ஈமச்சின்னங்கள் மற்றும் வாழ்விடப் பகுதியின் காலத்தை,கிடைத்த பொருள்களின் அடிப்படையிலும் மண்ணடுக்கு ஆய்வின் மூலமும் காலக் கணிப்பு செய்துள்ளமை ஆறாவது இயலில் விவாதிக்கப்பட்டுள்ளது

பொதுவாக தமிழக பெருங்கற்காலம் என்பது இரும்புக்காலம் எனக் குறிக்கப்பட்டு வருகின்ற நிலைக்கு மாறாக அதற்கும் முற்பட்ட இரும்பு பயன்படுத்தாத மக்கள் தாண்டிக்குடிப் பகுதியின் மேற்பகுதியில் வாழ்ந்துள்ளமையையும் இவர்கள் பெருங்கற்களைக் கொண்டு கல்பதுக்கை அமைக்காமல் ஈமத்தாழிகளைக் கொண்டு இறந்தவர்களுக்கு நினைவுச் சின்னங்கள் எடுத்துள்ளமையும் இதன் காலம் கி.மு 1500 முதல் கி.மு1000 வரை எனவும் இரும்புக்காலம் கி.மு 1000 லிருந்து கி.மு. 500 வரை எனவும் வரையறுத்துள்ளமையை இவ்வியல் விளக்குகிறது

ஏழாவது இயலில் அகழாய்வில் கிடைத்த மட்கலப் பொருட்களின் வகைகள் குறித்து விரிவாக பேசப்படுகிறது எட்டாவது இயல் அகழாய்வின் மூலம் பெறப்பட்ட முடிவுகளை எடுத்தியம்புகிறது மிக நேர்த்தியான ஒளிப்படங்களும் வரைபடங்களும் நிலப்படங்களும் இந்நூலில் இடம்பெற்றுள்ளமை சிறப்புக்குறியதாகும் இந்நூலில் விரிவான அரும்பொருட்பட்டியல் துணை நூல் பட்டியலுடன் அமைந்துள்ளமை மேலும் ஆய்வு செய்பவர்களுக்கு துணையாக அமையும்

**சு. இராசவேலு, தஞ்சாவூர்.**

**சி. பத்மநாதன், *யாழ்ப்பாண இராச்சியம் ஒரு சுருக்க வரலாறு*, குமரன் புத்தக இல்லம்,கொழும்பு, சென்னை, 2011, பக்கங்கள் V+202, விலை490/–**

இலங்கையின் தலைசிறந்த வரலாற்றறிஞர்களில் ஒருவரான பேராசிரியர் சி.பத்மநாதன் அவர்கள் அண்மைக் காலத்தில் வெளிவந்துள்ள தொல்லியல் சான்றுகளின் அடிப்படையில் இந்நூலை எழுதியுள்ளார். யாழ்ப்பாண இராச்சியத்தின் உருவாக்கம் பற்றிய முந்தைய கருத்துகளை மறுபரிசிலனை செய்யும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது. இந்நூல் 6 இயல்களாகக் கொண்டுள்ளது.

அண்மைக் கால தொல்லியல் சான்றுகளின் அடிப்படையில் யாழ்ப்பாண இராச்சியத்தின் முந்தைய வரலாற்றுக் கருத்துகள் மறுபரிசீலனை செய்யப்பட்டுள்ளது. பொலன்னறுவை இராசதானியின் வீழ்ச்சியோடு ஒரு மத்தியமயமான ஆட்சி முறையில் அழிவில் யாழ்ப்பாண இராச்சியமும் வன்னி இராச்சியங்களும் எழுச்சி பெற்றன என்ற கருத்து இந்நூலின் மூலம் முழுவதுமாக மறுக்கப்பட்டுள்ளது. தொடக்க காலம் முதல் இப்பகுதியில் தமிழர் குடியேற்றத்தின் விளைவாக அரசியல், சமூக, பொருளாதார முறைமைகள் ஏற்பட்டு அவை எழுச்சிக்கு அடிப்படையாக அமைந்தன என இந்நூலாசிரியர் கூறுகின்றார்.

தென்னிந்தியாவில் பெருமளவில் காணப்படும் பெருங்கற்காலப் பண்பாட்டுக் கூறுகள் யாழ்ப்பாண பிரதேசத்திலும் மிகுந்த அளவில் உள்ளதை இந்நூல் சுட்டிக் காட்டுகின்றது. கந்தரோடை வணிகத் தளமாக இடைக்காலத்தில் வளர்ச்சி பெற்றமை , நாக நாட்டின் எழுச்சி, அப்பகுதியில் சைவம் பௌத்தம் பரவியமை அவற்றின் மூலம் நிகழ்ந்த பண்பாட்டு தொடர்புகள் ஆகியவற்றை இந்நூலில் ஆசிரியர் குறித்துள்ளார். இலங்கைத் தமிழர் வரலாறு பற்றிய சிந்தனை மரபில் ஒரு திருப்பமாக இவ்வரலாற்று நூல் அமைந்துள்ளது. இலங்கையில் கிடைத்த பிராமிப் பொறிப்புகள் ஒளிப்படங்கள், துணை நூற்பட்டியல் இடம் பெற்றுள்ளமை இந்நூலுக்கு சிறப்பு சேர்கிறது.




**சு. இராசவேலு, தஞ்சாவூர்.**

# தமிழகத் தொல்லியல் கழக 21ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் – செயலர் அறிக்கை

தமிழகத் தொல்லியல் கழகத்தின் 21ஆவது கருத்தரங்கும் 22ஆவது ஆவணம் இதழ் வெளியீட்டு விழாவும் மதுரை தமிழ்நாடு ஹோட்டலில் ஜூலை 23, 24 சனி, ஞாயிறு கிழமைகளில் நடைபெற்றது. தொடக்க விழா தொல்லியல் கழகத் தலைவர் திரு. சு. இராஜகோபால் தலைமை தாங்கி இன்றையச் சூழலில் தொல்லியல் ஆய்வுகளின் அவசியத்தை விரிவாக எடுத்துரைத்தார் பேராசிரியர் எ சுப்பராயலு கழகத்தின் நோக்க உரை நிகழ்த்தும்போது கல்வெட்டு ஆய்வுகள் வரலாற்றுச் சான்றாதாரங்களாக மாறி வருவதை விரிவாக விளக்கியதோடு, அரசின் தொல்லியல் துறைகள் மேற்கொள்ளும் ஆய்வுகளையும் இடர்பாடுகளையும் குறிப்பிட்டார்

கழகத்தின் 22ஆவது ஆவணம் இதழை கலைமாமணி முனைவர் கு. ஞானசம்பந்தன் (தமிழ்ப் பேராசிரியர், தியாகராசர் கலைக்கல்லூரி, மதுரை) அவர்கள் வெளியிட முனைவர் சு வாசுதேவன் (இயக்குநர், பார்ச்சூன் பாண்டியன் ஹோட்டல், மதுரை) அவர்கள் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டு கருத்துரை வழங்கினார். முனைவர் இராம சுந்தரம் வாழ்த்துரை வழங்கினார். கழகச் செயலர் பேரா முனைவர் இல. தியாகராசன் அவர்களின் நன்றி உரையுடன் தொடக்க விழா இனிதே நிறைவுற்றது.

21ஆம் ஆண்டு கருத்தரங்க அமைப்பாளர்களில் பாண்டிய நாட்டு வரலாற்றுப் பேரவையின் நிறுவனர் மற்றும் புரவலர் திரு தங்கம் தென்னரசு அவர்களும் ஐநூற்றுவர் சேஷகிரி அவர்களும் மதுரை தானம் அறக்கட்டளையினரும் நன்றிக்குரியவர்களாவர்.

மாணவர்களுக்கான கட்டுரைப் போட்டி அமர்விற்கு முனைவர் கு. சேதுராமன் மற்றும் திரு பொ. இராஜேந்திரன் ஆகியோர் தலைமை வகித்தனர் இப்போட்டி அமர்வில் பங்கேற்றோர் விவரம் பின்வருமாறு:

| வ.எண் | பெயர் | கட்டுரைத் தலைப்பு |
|---|---|---|
| 1. | சு. நதியா | பூலாங்குறிச்சி – ஒரு கள ஆய்வு |
| 2. | செந்தாமரை | இராஜராஜ சோழர் அரசியர் தஞ்சைக் கோயிலுக்கு அளித்த கொடைகள் |

மேற்கண்ட கட்டுரைப் போட்டியில் சு. நதியா பரிசு பெற்றார்.

## அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

தலைமை : முனைவர் தொ. பரமசிவம்

1. கோவிலூர் ஆதீனம் அறக்கட்டளைச் சொற்பொழிவு
   திரு. கி. ஸ்ரீதரன் – தமிழகத் திருக்கோயில் விமானங்கள் (ஓர் வரலாற்றுப் பார்வை)

2. பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் நிறுவிய தி.நா. சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவு
   முனைவர் சொ. சாந்தலிங்கம் – சித்திரமேழி – பெரிய நாட்டார் கல்வெட்டுகள்

## முதல் அமர்வு

தலைமை : முனைவர் இரா. பூங்குன்றன்

| | | |
|---|---|---|
| *1* | *கோவி. இரவி* | - *கோவை பெரிய தடாகத்தில் பிராமி எழுத்துப் பொறிக்கப்பட்ட தாங்கி* |
| *2.* | S. Chandhini Bi | - Land Grants Copper Plates Pariharas and Vyavasthais |
| *3.* | *கே. பன்னீர்செல்வம்* | - *கல்வெட்டுகளில் துரோகிகள்* |
| *4* | *இரா. பூங்குன்றன்* | - *கடலாடிக் கல்வெட்டு* |
| *5.* | *சு கண்ணன்* | - *மருங்கூர், வடஹரி இராஜபுரம் கள ஆய்வு* |

## இரண்டாம் அமர்வு

தலைமை : முனைவர் வெ. வேதாச்சலம்

| | | |
|---|---|---|
| *1* | *ஜி சசிகலா* | - *வாமபூசை* |
| *2* | *சோ. கி கல்யாணி* | - *ஈட்டின் உவமையில் சோழர் அரசியல்* |
| *3.* | *அ சந்திரபோஸ்* | - *பாலையவனம் பண்டாரத்தார் வரலாறு* |
| *4* | *இரா. தமிழாதன்* | - *சுருளிமங்கலா தேவி மலைப்பள்ளத்தாக்கில் ஓர் ஆய்வு* |
| *5.* | *எஸ். மணிகண்டன்* | - *எஸ்.ஆர். லூசிங்டனின் அறிக்கை 1799* |

## மூன்றாம் அமர்வு

தலைமை : முனைவர் வள்ளி சொக்கலிங்கம்

| | | |
|---|---|---|
| *1.* | *சு வெங்கடேசன்* | - *சேண்டத்தூர் நடுகல்* |
| *2.* | *சந்திரா* | - *மீனாட்சி அம்மன் கோயிலில் ஆவணி மூலத் திருவிழாவும் ஜாதிக் கட்டளையும்* |

3. கோவிந்தராசு - புதுக்கோட்டை மாவட்டத்தில் சில அரிய சிற்பங்கள்

4. பழனிச்சாமி - கொங்கு கல்வெட்டில் பறையன்

## நான்காம் அமர்வு

தலைமை : முனைவர் ஜெ. ராஜாமுகமது

1. காயத்ரிதேவி - புதுக்கோட்டை சமஸ்தான அக்ரஹாரங்கள்

2. கரு இராஜேந்திரன் - புதுக்கோட்டை திருவேப்பூர் திருநற்கிள்ளி சோழப்பெரும்பள்ளி - ஓர் ஆய்வு

3. கு. ஸ்ரீரங்கமாலா - கல்வெட்டில் வெள்ளாட்டிகள்

4. சமா இரத்னவேல் - பொறியாளர் பார்வையில் பாசனக் கல்வெட்டுகள்

பொதுக் குழு கூட்டம் நடைபெற்றதைத் தொடர்ந்து கருத்தரங்கு இனிதே முடிவுற்றது.

முனைவர் இல. தியாகராசன்
செயலர்

# கட்டுரையாளர்கள் முகவரி

**பேராசிரியர் வீ. அரசு**
தலைவர், தமிழ் இலக்கியத் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை 600 005.

**செல்வி சு. இந்திரா காந்தி**
முனைவர் பட்ட ஆய்வாளர்
சிற்பத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 613 010.

**திரு. சி. இளங்கோ**
விருந்துநிலை விரிவுரையாளர்,
தமிழ் இலக்கியத் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.

**திரு. கோ. இரவீந்திரன்**
பிரெஞ்சு இந்தியக் கழகம்,
புதுச்சேரி.

**முனைவர் சு. இராசகோபால்**
"இராஜாஜி இல்லம்"
7, முதல் தெரு
வெங்கடேஸ்வரா நகர், அடையாறு
சென்னை 600 020

**முனைவர் சு. இராசவேலு**
42, நாலடியார் தெரு, ஸ்ரீசக்தி நகர்,
ஆவடி கார்ஷெட் காம்ப்ளக்ஸ்
சென்னை – 600 109.

**முனைவர் செ. இராசு**
"புலவர் பூங்குடில்"
58/2,திரு.வி. .கா. நகர் சாலை
பாலக்காட்டுத் தோட்டம்
ஈரோடு – 638 011

**திரு. கரு. இராசேந்திரன்**
மேலப்பனையூர் (அஞ்சல்)
விராச்சிலை (வழி)
புதுக்கோட்டை 622 420

**திரு. கோ. இராசேந்திரன்**
கல்வெட்டு ஆய்வாளர் (ஒய்வு),
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை,
மதுரை

**திரு. தீ.கி.வெ. ஈஸ்டர்சன்**
134, ம.அ.ஊ. குடியிருப்பு,
தூத்துக்குடி 628 003.

**முனைவர் கோ. எழில்ஆதிரை**
இணைப் பேராசிரியர்
6, பெருமாள் வடக்கு வீதி,
வெளிப்பாளையம்,
நாகப்பட்டினம் 611 011.

**திரு. சு. கண்ணன்**
பிளாட் எண். 172,
கற்பகம் நகர்,
கோ. புதூர்,
மதுரை – 625 007.

**திரு. ப. கலைச்செல்வன்**
விரிவுரையாளர்,
வரலாற்றுத் துறை,
அண்ணாமலை பல்கலைக் கழகம்,
அண்ணாமலை நகர் – 608 002

**திரு ம. காந்தி**
875, பேஸ் 2,
7வது குறுக்குத்தெரு,
சத்துவாச்சாரி
வேலூர் 632 009

**செல்வி. எம். காயத்திரி தேவி**
39, பெரிய தெரு
திருக்கோகர்ணம் (அஞ்சல்)
புதுக்கோட்டை – 622 002.

**திரு கி. குமார்**
இ.103,பொதுப்பணித்துறை
குடியிருப்பு,
தாடண்டர் நகர்,
சைதாப்பேட்டை,
சென்னை 600 015

**திரு. செ. கௌரிசங்கர்**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் 10

**திரு. அ. சங்கர்**
த/பெ. அம்மாசி,
மாரனேரி, புதுத் தெரு,
மேகளத்தூர் அஞ்சல்,
தஞ்சாவூர் – 613 102.

**முனைவர் அ. சந்திரபோஸ்**
விரிவுரையாளர்,
மாட்சிமை தாங்கிய மன்னர் கல்லூரி,
புதுக்கோட்டை – 622 001.

**திரு. சொ. சந்திரவாணன்**
தமிழ்நாடு தொல்லியல் ஆய்வுத் துறை
உதவி இயக்குநர் (ஓய்வு)
இராசபாளையம்.

**முனைவர் ப. சண்முகம்**
டி1/25, ஆனந்த குடியிருப்பு,
50, லாட்டீஸ் பிரிட்ஜ் சாலை,
திருவான்மியூர்,
சென்னை 600 041

**செல்வி கோ. சசிகலா**
258, பாரதியார் மெயின் தெரு
கடைசி, அயப்பன் கோயில் அருகில்,
ஜெய்ஹிந்த்புரம்,
மதுரை 625 011

**முனைவர் சொ. சாந்தலிங்கம்**
மாவட்ட தொல்பொருள்
அலுவலர் (ஓய்வு)
32, பிரீதம் தெரு, துரைசாமி நகர்
மதுரை 625 010.

**செல்வி செ. சாந்தி**
சிற்பத்துறை,
தஞ்சாவூர் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

**செல்வி. சாயிகவிதா**
முனைவர் பட்ட ஆய்வாளர்
சிற்பத்துறை,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 613 010.

**திரு. ஜெ. சவுந்தரராஜன்**
விரிவுரையாளர்,
பண்டைய வரலாறு மற்றும்
தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை 600 005.

**திரு.ஜெ.ஆர். சிவராமகிருஷ்ணன்**
விரிவுரையாளர்,
வரலாற்றுத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
சிதம்பரம் – 608 002.

**திரு. சி. சிவக்குமார்,**
விரிவுரையாளர்,
அண்ணாமலை பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்.

**திரு. பெ. சுதாகர்**
த\பெ. பெருமாள்
பொய்யூர், மேலக்கருப்பூர் (அ)
அரியலூர் 621 707.

**திரு. எஸ். சுந்தர் பரத்வாஜ்**
21, 4வது டிரஸ்ட் கிராஸ் தெரு,
மந்தைவெளிப்பாக்கம்,
சென்னை 600 028

**திரு. து. சுந்தரம்**
21, கிரீன்வியூ டெலிகாம் குடியிருப்பு,
விளாங்குறிச்சி சாலை,
பீளமேடு, கோவை – 641 004

**திரு. டி.எஸ். சுந்தரம்,**
3/2ஏ, கீழூர்,
திருப்பதிசாரம் 629 901
கன்னியாகுமரி மாவட்டம்

**திரு. இரா. செந்தில்**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
கல்வெட்டியல் மற்றும் தொல்லியல்
துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் 10

**முனைவர் வி. செல்வகுமார்**
விரிவுரையாளர்
கல்வெட்டியல் மற்றும் தொல்லியல்
துறை, தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 613 010.

**திரு. ந. செல்வராஜ்**
அய்யம்பேட்டை,
தஞ்சாவூர் மாவட்டம்.

**திரு. த. தங்கதுரை**
த/பெ. ப. தங்கையா
பாத்தம்பட்டி (தெற்கு) (அஞ்சல்)
ஆலங்குடி (தாலுக்கா),
புதுக்கோட்டை மாவட்டம்.

**திரு. வி.பி. தங்கவேல்**
தேர்வுநிலை விரிவுரையாளர்,
அரசுக் கலைக் கல்லூரி,
முசிறி 621 211.

**திரு த.த. தவசிமுத்து**
36, பூவரசுர் மெயின் ரோடு
ஆறுமுகனேரி 628 202
தூத்துக்குடி மாவட்டம்

**முனைவர் இல. தியாகராாசன்**
தலைவர், வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி
அரியலூர் 621 713.

**திரு. கோ.தில்லை கோவிந்தராசன்**
தலைமை ஆசிரியர்,
ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி,
பொந்தியாகுளம், பாபநாசம் வட்டம்,
தஞ்சாவூர் 614 301

**திரு. ஆர். துரைரங்கம்,**
தேர்வுநிலை விரிவுரையாளர்,
தாகூர் கலைக் கல்லூரி,
பாண்டிச்சேரி 605 008.

**Dr. S. Pathmanathan**
3/A, Palmyra Court,
Colombo - 03
Sri Lanka

**திரு. செ. நந்தகுமார்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
பண்டைய வரலாறு மற்றும்
தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.

**முனைவர் மா. பவானி**
விரிவுரையாளர்
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 010

**Dr.K.Panneerselvam**
O/o, Director of Epigraphy
Archaeological Survey of India
Old University Office Building
Mysore-570 005

**திரு. பாபு (எ) இராமசாமி**
பிரெஞ்சு இந்தியக் கழகம்
புதுச்சேரி.

**திரு. பரந்தாமன்**
ஆய்வு மாணவர்,
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்

**திரு. பழனியப்பன்**
சம்பை,
பவானி வட்டம்,
ஈரோடு மாவட்டம்

**திருமதி. எஸ். பார்வதி**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த் துறை
ஸ்ரீ பராசக்தி பெண்கள் கல்லூரி
குற்றாலம்

**திரு. கே. பாலசுப்பிரமணியன்**
118, தில்லை நகர்,
எஸ். வெள்ளாளப்பட்டி,
கரூர் 639 004.

**திரு. மு. பிரபாகரன்**
வேலூர் அஞ்சல்,
பெரம்பலூர் வட்டம் 621 104

**திரு ப. பூபாலன்**
9, பாட்டை தெரு
நவல்பூர் (அஞ்சல்),
இராணிப்பேட்டை 632 402

**திரு. ஆ. பெருமாள்**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
புதுச்சேரி பல்கலைக்கழகம்,
புதுச்சேரி

**திருமதி மங்கையர்க்கரசி**
கே.சி.எம்.பள்ளி
66, முத்துவேல் லே–அவுட்
கே.கே.சாலை,
விழுப்புரம் 605 602

**திரு. ஆர். மணி**
10, ஐஸ்வர்யா தெரு,
எழில் நகர்,
பெரிய அல்லாபுரம்,
தொரப்பாடி, வேலூர் – 632 002

**திரு. வீ. முத்துகுமார்**
117, மாயாண்டி சாமி நகர்
திருவப்பூர்,
புதுக்கோட்டை – 3.

**திரு. கோ. ரெங்கராஜன்,**
விரிவுரையாளர்,
அண்ணாமலை பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்.

**திரு. இரா. ரமேஷ்**
த\பெ. கே. இராமசாமி
காளயனூர், கருங்கல்லூர் (அஞ்சல்)
மேட்டூர் (வட்டம்),
சேலம் (மாவட்டம்)

**திரு. எம்.எஸ். ராம்ஜி,**
கீழக்குளத்தூர்,
அரியலூர் வட்டம்,
பெரம்பலூர் மாவட்டம் 621 715

**திரு. ஆ. ராஜா**
த/பெ. சி. ஆரோக்கியசாமி
நெப்பியப்பட்டி
வடவாளம் (அஞ்சல்)
புதுக்கோட்டை தாலுக்கா
& மாவட்டம் – 622 004.

**முனைவர் ஜெ. ராஜாமுகமது**
1/107, டி. ஜீவா நகர்,
ஒன்றாம் வீதி,
புதுக்கோட்டை 622 001.

**Mr. M. Rajesh**
NMMA,
Archaeological Survey of India,
24, Tilak Marg,
New Delhi 110 001.

**Dr. M.r. Raghava Varier**
Manalil Tirkkkoyil (Post)
Chelita Edakkulam,
Quilandi, Kerala 673 306

**முனைவர் கோ. விஜயவேணுகோபால்**
15, 4வது குறுக்குத் தெரு
ஜெயா நகர்,
ரெட்டியார் பாளையம்
பாண்டிச்சேரி 605 010

**திரு. வீரராகவன்**
கே.ஜி.எம். பள்ளி
66, முத்துவேல் லே–அவுட்
கே.கே.சாலை,
விழுப்புரம் 605 602

**திரு ந.வேங்கடேசன்**
40, கிழக்கு சந்நிதி வீதி,
வில்லியனூர்
புதுச்சேரி 605 110

**திரு ப.வெங்கடேசன்**
3/178, கம்பன் தெரு
பெல்லியப்பா நகர்
வாலாஜாப் பேட்டை – 632 513

**Sri. P. Venkatesan**
Superintending Archaeologist,
The Regional Director Office,
Archaeological Survey of India,
Bangalore

**முனைவர் வெ. வேதாச்சலம்**
51/12இ, ரத்தினசாமி நாடார் தெரு,
பி.பி. குளம்,
மதுரை – 625 002

**திரு. கி. ஸ்ரீதரன்**
324, முதல் தெரு,
நடேசன் நகர்,
விருகம்பாக்கம்
சென்னை – 600 092.

**முனைவர் பா. ஜம்புலிங்கம்**
கண்காணிப்பாளர்
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் 613 010

# வாழ்த்துகிறோம்

தமிழகத் தொல்லியல் கழகமும் மற்றும் ஆவண இதழ் நிறுவனர்களில் ஒருவருரான பேராசிரியர் முனைவர் புலவர் செ. இராசு அவர்களின் தொல்லியல் மற்றும் கல்வெட்டுப் பணிகளைப் பாராட்டி தமிழ்நாடு அரசு 2012ஆம் ஆண்டிற்கான உ.வே.சா. விருதினை சித்திரைப் புத்தாண்டு விழா நாளில் மாண்புமிகு தமிழக முதல்வர் செல்வி ஜெ. ஜெயலலிதா அவர்கள் அளித்து சிறப்பித்துள்ளார்கள்.




தமிழ்க் கல்வெட்டுகள் மற்றும் தொல்லியல் ஆய்வுகளில் சிறப்புடன் பணிபுரிந்த சிறந்த ஆய்வறிஞர்களுக்கான இவ்விருது முதன்முறையாக தமிழக அரசால் உருவாக்கப்பட்டு தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறைப் பேராசிரியராகப் பணிபுரிந்து பல அரிய நூல்களை எழுதிய நமது தொல்லியல் கழகத்தின் தலைவராக விளங்கிய பேராசிரியர் இராசு அவர்களுக்கு வழங்கியமை தமிழகத் தொல்லியல் கழகத்திற்கு மட்டுமன்றி தமிழ்நாட்டுத் தொல்லியல், கல்வெட்டு ஆய்வாளர்களுக்குக்கெல்லாம் பெருமை சேர்ப்பதாகும். பேராசிரியர் புலவர் அய்யா அவர்களைத் தமிழகத் தொல்லியல் கழகம் வாழ்த்திப் பாராட்டுவதுடன் தொல்லியல் மற்றும் கல்வெட்டு ஆய்வுகளில் சிறந்து விளங்கும் அறிஞர்களுக்காக உ.வே.சா விருதை ஏற்படுத்தியுள்ள மாண்புமிகு தமிழக முதல்வர் ஜெ. ஜெயலலிதா அவர்களுக்கும், தமிழக அரசுக்கும் தமிழகத் தொல்லியல் கழகம் தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

# நன்றி

தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினராகவும், கழகத்தில் டி.என். சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவை நிறுவி, ஒவ்வொரு ஆண்டும் அறக்கட்டளை சொற்பொழிவுகள் தங்கு தடையின்றி நடைபெற இவ்வாண்டு ரூ. 50,000/– வழங்கியுள்ள பத்மஸ்ரீ முனைவர் ஐராவதம் மகாதேவன் அவர்களுக்கு தமிழகத் தொல்லியல் கழகம் தனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

*கல்வெட்டு மற்றும் கட்டுரைகளை ஆவணத்தில் எழுதிய ஆசிரியர் களுக்கு உதவி புரிந்த கீழ்க்கண்டவர்களுக்கு நன்றி.*

1. முனைவர் இல. தியாகராஜன் அவர்கள் எழுதிய கட்டுரைகளுக்கு உதவி புரிந்த திருவாளர்கள் சே. பாண்டியன், இரா. கலையரசன், பெ. ரவிச்சந்திரன், வே. செவ்வேள், கே. வேலு, எம்.எஸ். ராம்ஜி, சுபாஷ் சந்திரபோஸ், தேவேந்திரன், ஆ. நெடுஞ்செழியன், மு. பிரபாகரன், டி. சாமிதுரை, பி. காமராஜ், மா. கொடியன், டாக்டர் க. பெரியசாமி, கே.எம். கருப்புசாமி, சி. முத்துவீர மூப்பனார், புலவர் ஏ. இராமசாமி, டி.கே. இராஜேந்திரன், இ.கா.ப., ஆணையர் த. பிச்சாண்டி, இ.ஆ.ப., சுதர்சனம், சம்பத், குமரேச முதலியார், சின்னையன், புகழேந்தி, பழனிச்சாமி, கொல்லிமலைச் சித்தர் பகவான் சுவாமிகள், தங்கைய நயினார், டி. கதிர்வேல் உடையார், கி. சின்னச்சாமி நயினார், க. வடிவேல், தனவேல் உடையார், பி. மனோகரன், என். சுந்தரேசன், வை. சுந்தரேசன், கி. தனசேகரன், தோ. வெங்கடாசலம், கிருஷ்ணசாமி, செந்தில் குமார், வி. துரை, விஸ்வநாதன், திருமதி தனலெட்சுமி.

2. திரு. கே. பாலசுப்பிரமணியம் எழுதிய கட்டுரைக்கு உதவி புரிந்த திருவாளர்கள் நாகார்ஜுனா, கே. கருப்பையா, ஏசுபாபு, பி. சுகுமார், எஸ். அழகேசன், வி. யுவராஜ்.

# அஞ்சலி

## சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்

தோற்றம் : 29.5.1923 சமாதிநிலை : 3.10.2011

தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினரும், கழகத்தில் 'கோயிலூர் ஆண்டவர் அறக்கட்டளைச் சொற்பொழிவு' நிறுவியவருமான சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள் 3.10.2011 அன்று முக்தியடைந்தார்கள்.



ருக்மணி அருண்டேல் அவர்களது வளர்ப்பில் கல்வியும் கலையும் நிர்வாகத் திறனும் பெற்று வளர்ந்த அவர்கள் ஒளிப்படத்துறை, அச்சுத்துறை, நூல்கள், நெசவு வடிவமைப்புத்துறை ஆகியவற்றில் சிறந்து விளங்கி அமெரிக்க நாட்டிலும் பிற மேலைநாடுகளிலும் புகழும் செல்வமும் ஈட்டியவர்கள். சென்னை கலாச்சேத்திராவின் நாடகக் குழுக்கள் பல நாடுகளுக்கும் பயணம் மேற்கொள்ள மேலாளராகவும், மேடை நிர்வாகத்தில் ஒலி-ஒளி அமைப்பு உத்தித் திறனும் கொண்டு விளங்கியவர்கள். 1995ல் கோவிலூர் மடாலயத்தின் 12ஆவது மடாதிபதியாகப் பட்டமேற்று தான் ஈட்டிய பெருஞ்செல்வத்தைக் கொண்டு சிற்பம், தேர், செப்புத் திருமேனி, திருப்பதிகம் ஓதுதல், நாதசுவரம் - மேளம், வேதாகமம் என்று எல்லாத் துறைகளிலும் பயிற்சி நிறுவனங்களை ஏற்படுத்தியும், கோவிலூர் ஆண்டவர் நிகர்நிலைப் பல்கலைக்கழகத்தை உருவாக்க வழி வகுத்தார். சுசீந்தரம் பற்றி கே.கே.பிள்ளை எழுதிய நூல் வெளியிட வழிவகுத்தார். சித்தன்னவாசல், பனமலை, தஞ்சைப் பெரியகோயில் ஓவியங்களை வண்ண ஒளிப்படங்களாக எடுத்து வெளியிட்டுள்ளார். அவர்களது இழப்பு கலை மற்றும் தொல்லியலுக்கும் ஈடு செய்ய முடியாத இழப்பாகும்.

## திரு தே.கோபாலன்

தோற்றம் 12-12-1953 மறைவு : 23-02-2012

தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினரும் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் தொல்லியல் அலுவலருமான திரு தே.கோபாலன் 23-02-2012 அன்று இயற்கை எய்தினார். திருநெல்வேலி, நாகர்கோயில், சென்னை, மதுரை ஆகிய இடங்களில் ஆர்வமுடன் பணியாற்றியவர். துறைக்கும் கழகத்திற்கும் அவரது பங்களிப்புகள் குறிப்பிடத்தக்கவை. அவரது கண்டுபிடிப்புகள், கட்டுரைகள், நூல்கள், அகழாய்வுப் பணிகள் தமிழகத் தொல்லியலுக்குப் பயனூட்டுபவை.

## TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

## RECEIPTS AND PAYMENT ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2012

| RECEIPTS | | PAYMENTS | |
|---|---|---|---|
| **Opening Balance** | | | |
| Cash in hand | 3,653.00 | Stationery | 3,601.00 |
| Indian Bank | 6,830.00 | Printing charges | 51,600.00 |
| State bank of India | 4,611.62 | Xerox | 107.50 |
| Book Sales | 6,955.00 | Auditor Fees | 1,650.00 |
| Donation | 14,050.00 | Salary | 4,500.00 |
| Membership Fees | 84,700.00 | Honararium | 4,000.00 |
| Fixed Deposit | 330,000.00 | Postage & Courier | 5,143.00 |
| ICHR Grant | 57,250.00 | Freight Charges | 780.00 |
| Interest | 25,550.00 | Travelling | 3,919.00 |
| | | Fixed Deposit | 410,000.00 |
| | | Sundries | 5,100.00 |
| | | Closing Balance Indian Bank | 2,446.00 |
| | | State Bank of India | 32,940.62 |
| | | Cash in hand | 7,812.50 |
| | 533,599.62 | | 533,599.62 |

# TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

## INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2012

| | | | |
|---|---|---|---|
| To Stationery | 3,601.00 | By Book Sales | 6,955.00 |
| To Printing Charges | 51,600.00 | By Donations | 14,050.00 |
| To Xerox | 107.50 | By Members Fess | 84,700.00 |
| To Audit fees | 1,650.00 | By Interest | 25,550.00 |
| To Salary | 4,500 | By ICHR Grant | 57,250.00 |
| To Honararium | 4,000.00 | | |
| To Postage & Courier | 5,143.00 | | |
| To Freight | 780.00 | | |
| To Travelling | 3,919.00 | | |
| To Sundries | 5,100.00 | | |
| To Excess of Income Over Expenditure | 108,104.50 | | |
| | 188,505.00 | | 188,505.00 |

## TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

### BALANCE SHEET AS ON 31.03.2012

| LIABILITES | | ASSEST | |
| --- | --- | --- | --- |
| Fund Account | 471,899.42 | Furniture | 11,000.00 |
| | | Steel Cup Board | 7,700.00 |
| | | Fixed Deposits | 410,000.00 |
| | | Indian Bank | 2,446.00 |
| | | State Bank of India | 32,940.62 |
| | | Cash in hand | 7,812.80 |
| | 471,899.42 | | 471,899.42 |

### FUND ACCOUNT

| | | |
| --- | --- | --- |
| 01.04.2011 | By Opening Balance | 363,794.92 |
| 31.03.2012 | By Excess of Income over Expenditure | 108,104.50 |
| 01.04.2012 | By Opening Balance | 471,899.42 |

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்

ஆவணம் தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச் சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய அனைவரின் இல்லங்களிலும் இடம் பெற வேண்டிய இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

ஆவணம் இதழ்கள் 1 முதல் 15 மற்றும் 17 இருப்பு இல்லை

ஆவணம் 16 - 19 - ரூ. 150/- (இதழ் ஒன்றுக்கு)

ஆவணம் 20 - 23 - ரூ. 200/- (இதழ் ஒன்றுக்கு)

வரலாற்றுப்போக்கில் தென்னகச் சமூகம் (நொபொரு கராஷிமா) ரூ. 100/-

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெறவிழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ. 2000/-
நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் ரூ. 4000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ. 50/- செயலாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால், கூடவே வங்கிக் கட்டணம் ரூ. 100/-ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும். ஆவணம் இதழ் நேரில் பெற்றுக் கொள்ளலாம். அல்லது அஞ்சலில் பெற ரூ. 50/- பணவிடை அனுப்பவும்.


முகவரி :

**செயலர்/பொருளாளர்**

**தமிழகத் தொல்லியல் கழகம்**

(மே/பா) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை

தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 010

Contact :

**Secretary / Treasurer, Tamil Nadu Archaeological Society**

C/o. Department of Eqigraphy and Archaeology, Tamil University, Thanjavur - 613 010


